


ஸ்ரீஸத்குருப்யோ நம:

வியாஸபகவான் அருளிச்செய்த

॥ श्रीगुरुगीता ॥

# ஸ்ரீ குருகீதை.

இது

தஞ்சைமாநகரம்

வெ. குப்புஸ்வாமிராஜு என்னும்

பூர்வாசிரமநாமம் பூண்டிருந்த

ஸ்ரீ. பிரஹ்மாநந்தஸ்வாமிகள்

இயற்றியருளிய

தமிழுரையுடன்

டாக்டர் மஹா-ள-ள-ஸ்ரீ

T. K. இராஜுசெட்டியார் அவர்களால்

தஞ்சை

ஸ்ரீ சங்கரவிலாச சாரதாமந்திர முத்திராசாலையில்

பதிப்பிக்கப்பெற்றது.



காப்பி-ரு 1] இரண்டாம்பதிப்பு. [சாலிவா-ரு 1½.





ஸ்ரீமுஸ்ரீ பிரஹ...



ஸ்ரீ ஸ்ரீ பிரஹ்மாநந்தஸ்வாமிகள்.

ஸ்ரீ ஸத்குருப்யோ நம:

முதற்பதிப்பின்

# முகவுரை.

புராணேதிகாசமுதலியவற்றில் உபதேச வடிவமாயுள்ள பல கீதைகளடங்கிய பலபுத்தகரூபமாய் வெளிப்படும் கீதைக்கொத்தின் மூன்றும்புத்தகமாகிய குருகீதை ஸ்ரீ ஸ்காந்தபுராணத்தின் உத்தரகண்டத்தில் சநற்குமார சங்கிதையின் பிற்பாகத்தில் உமாமகேசுவரசம்வாதமயமாய் உஎசு சுலோகங்களடங்கிய மூன்று அத்தியாயவடிவினது. "आचार्यवान्पुरुषो वेद ஆசாரியனையுடைய புருஷன் அறிவன். (சத்துவடிவ ஆத்மாவை அறிதற்கு இதைவிட வேறு உபாய மில்லை.)" என்று சாந்தோக்கியம், "यस्य देवे परा भक्तिर्यथा देवे तथा गुरौ तस्यैते कथिता ह्यर्थाः प्रकाशन्ते महात्मनः ॥ எவனுக்கு ஈசுவரனிடத்து மேலான பக்தியிருக்கின்றதோ, ஈசுவரனிடத்திற்போல குருவினிடத்துமிருக்கின்றதோ, அந்த மகாத்மாவுக்கே சொல்லப்பட்ட இவ்வர்த்தங்கள் பிரகாசிக்கும்." என்னும் சுவேதாசுவதரவுபநிஷத முதலிய பிரமாணங்களாலும், லோகாநுபவத்தாலும் குருவின்றியெவ்விதத்தாலும் ஆத்மஞானமும் மற்றெவ்வகை ஞானமும் உதியாதென்பது பிரசித்தம்.

ஆகவே இக்குருகீதையானது குருவின் லக்ஷணம், அவர் பெருமை, அவரையுபாசிக்கு முறைகள் முதலியவற்றை அறிவிக்கும் வாயிலாக ஜீவர்களுக்குக் குருபக்தி செவ்வையா யுண்டாகுமாறு எடுத்துக்கூறுகின்றது. அதுபற்றி ஆஸ்திகர்கள் ஒவ்வொருவரும் இக்குருகீதையினை தினந்தோறும் படனஞ்செய்துவரவேண்டியது. இதனைப் படனஞ் செய்யும் முறை, அதனால் உண்டாகும் பயன் முதலியன இந்நூலின்கண்ணேயே செவ்வையாய் நிரூபிக்கப்பட்டிருக்கின்றன. ஆனால் இது சம்ஸ்கிருதத்திலிருத்தலால் தமிழ் நாட்டாருக்குப் பிரயோஜனப்படாமை கருதி அவர்களுக்கு உபயோகமாமாறு தஞ்சை ஸ்ரீமான் வெ. குப்புசாமி ராஜூ அவர்களால் தமிழில் மொழிபெயர்க்கப்பட்டது. இதனை இப்போது எம்மிடத்திலுள்ளனவும், தஞ்சை மகாராஜா அரண்மனை சரசுவதிமாலிலுள்ளனவும் தெலுங்கு, நாகரி அக்ஷப்பிரதிகளுமாகிய பல பிரதிகளைக்கொண்டு பண்டிதர்வான்கள் முன்னிலையில் சோதித்து, தேவநாகர எழுத்திலும் கிரந்த எழுத்திலுமாக மூலசுலோகங்களும் அவற்றிற்கு நேரான தமிழ் மொழிபெயர்ப்பும் அதன் வியாக்கியானங்களுடன் சேர்த்து வெளியிடலாயின. இதில் ஏற்படும் எழுத்துக்குற்ற முதலியவற்றைப் பெரியோர் பொறுப்பாராக.

வெ. வீராசாமிராஜூ,
வி. கோவிந்தன் & பிரதர்ஸ், தஞ்சாவூர்.

உ

ஸ்ரீ குருப்யோ நம:

ஸ்ரீ குருகீதை இரண்டாம்பதிப்பின்

# முகவுரை.

முந்திய பதிப்பைவிட இந்தப்பதிப்பில் சிலசுலோகங்கள் மைசூர் முதலியவிடங்களிற் கிடைத்த பிரதிகளைக்கொண்டு திருத்தப்பட்டுள்ளன; சிலபாடபேதங்களும் சேர்க்கப்பட்டுள்ளன. அந்தப்பிரதிகளிலுள்ளபடி எஅ. அதிக சுலோகங்களும் உரையுடன் சேர்க்கப்பட்டுள்ளன. நூன்முகப்பில் யுக்திபூர்வக குருப்பிரபாவம், இந்நூலுரையாசிரியராற் குருவிஷயமாகச் செய்யப்பட்டுள்ள சில கவிகள், ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தியின் படமுதலியனவும் சேர்க்கப்பட்டுள்ளன. நூலின் கடைசியில் பிறவிடங்களிலிருந்தெடுக்கப்பட்ட சில சுலோகங்கள் உரையுடன் அமைக்கப்பட்டுள. இந்நூலினை உலகத்திலுள்ளார் ஒவ்வொருவரும் அவசியம் படிக்கவேண்டுமென்பதனை இந்நூன் முகப்பிலுள்ள யுக்திபூர்வக குருப்பிரபாவத்தினைப் படித்துப்பார்ப்பதனாற் றெரியலாம்.

இதனைக் குருபக்தியிற் சிறந்த யாவரும் பாராயணஞ்செய்து உய்யும்வண்ணம் அச்சிடுவித்த மகா-ள-ள-ஸ்ரீ T. K. ராஜு செட்டியார் அவர்கள் உபகாரம் என்றும் மறக்கத்தக்கதன்று.

சரவணசாமி.

॥ ॐ ॥

யுக்திபூர்வக

# குருப்பிரபாவம்.



"तद्विज्ञानार्थं स गुरुमेवाभिगच्छेत्समित्पाणिः श्रोत्रियं ब्रह्मनिष्ठम् ॥ அவன் அவ்வாத்மசாக்ஷாத்காரத்தின் பொருட்டுச் சமித்தினைக் கரத்திற்றாங்கியவனாய்ச் சுரோத்திரியரும் பிரஹ்மநிஷ்டருமான குருவினையே சரணடைக." என்னும் மூண்டக (க - உ - கஉ) சுருதிவாக்கியப்படி, சுருதிசாஸ்திரார்த்தங்களைச் செவ்வையா யுணர்ந்திருப்பவரும் பிரஹ்மநிஷ்டருமான குரு எவரோ, அவரிடத்திற்றான் ஈசுவரனது சிற்சத்தியானது மற்றெல்லாவிடங்களினும் விசேஷமாய்ப் பிரகாசிக்கின்றது. சூரியனது தகனசக்தி எங்கும் வியாபித்திருப்பதாயினும், அது தான் நேரே பஞ்சுமுதலியவற்றைத் தகிக்கக்கூடிய தாகாது, சூரியகாந்தக்கல்லின் (பூதக்கண்ணாடியின்) வழியாகவே வெளிப்பட்டு அடுத்த பஞ்சு முதலியவற்றை யெரிக்கும். அவ்வாறே ஈசுவரனது சிற்சக்தியும் எங்கும் வியாபித்திருப்பதாயினும், தத்துவஞானியாகிய குருவின் வாயிலாகவே வெளிப்பட்டுத் தன்னெதிர்ப்பட்ட சிஷ்யன் முதலியோர் மலங்களைப் பஸ்மமாக்கு மியல்புடையதாம்; வேறுவகையினு மில்லை.

அன்றியும், சூரியனது பிரகாசம் எங்கும் சாமானியமாக விளங்குவதாயினும், கண்ணாடி, ஜலம், பளபளப்பான தகடுமுதலிய சொச்ச (மினுமினுப்புள்ள) பதார்த்தங்களிற் பட்டுப் பிரதிபலனவாயிலாக மிகவும் விசேஷமாய்ப் பிரகாசித்து, அச்சாமானியப் பிரகாசவடிவத்தால் போக்கமுடியாத இருளினைப் போக்கி, அங்குள்ள பதார்த்தங்களை விளக்குகிறது. அதுபோல ஈசுவரனது சிற்சொரூபமும் எங்கும் சாமானியமாகப் பிரகாசிப்பதாயினும், அது தத்துவநிஷ்ட குருவின் வாயிலாற்றான் மிகவிசேஷமாய் வெளிப்பட்டு, தன்னைச் சார்பவர் உள்ளத்தின் அஞ்ஞானவிருளை நீக்கி, அவர்ஸ்வரூபமுதலியவற்றைப் விளக்குவதாகின்றது; வேறெவ்விதத்தாலும் இருதயவிருளைப் போக்குமியல்புடைய தாகாது.

இக்காரணத்தால் எவரும் ஈசுவரனை யுபாசித்து, அவர் பிரத்தியக்ஷராயினும், இஷ்டசித்தியைப் பெறக்கூடுமே யல்லாது, நேரே முக்தியைப் பெறுதல் கூடாது. ஆனால் அவர், கிருபையால் தத்துவஞானியாகிய குருவின் சரீரத்தை யதிஷ்டித்து நின்றே உண்மையுபதேசஞ் செய்வர்; வேறுவிதத்தினாற் செய்யார். ஆதலால் ஈசுவராதிஷ்டிதகுருரூபம் ஈசுவரசொரூபத்திலும் விசேஷமுடையதாம். அதனை இந்நூலின் அஅ-வது, நசந-வது சுலோகங்களின் றாற்பரியத்தாற் காண்க.

ஈசுவரனை நேரே உபாசிப்பவனுக்கு புண்ணியமாகிய அதிருஷ்ட (காணப்படாத) பலமாத்திர முண்டாகும். குரு வடிவ ஈசுவரனை உபாசிப்பவனுக்கு அவ்வதிருஷ்டபலத்தோடு, அவரது பிரசந்நத்தன்மையால் அவர்திருமுகத்தினின்று வெளிப்படும் உபதேசமொழிகளால் உபாசகனது அஞ்ஞானங்களெல்லா மொழிந்து, உண்மையுணர்ச்சியால் அளவிலாநந்தத்தினை யநுபவித்தலாகிய திருஷ்ட (பிரத்தியக்ஷ) பலமும் உண்டாகிறது. இதனுலும் குருரூபம் ஈசுவரஸ்வரூபத்தினும் விசேஷித்ததாம்.

ஈசுவரன் அப்பிரத்தியக்ஷராயிருக்கினும், அவரது சிற்சத்தியானது தத்துவநிஷ்டரது சரீரத்தில் மின்சாரசக்தி (எலெக்டிரிஸிடி)யினைப்போல துவாதசாந்தத்தின்(உச்சியின்) வழியாக விசேஷமாய்ப் பிரவேசித்து, மிகவும் பிரகாசித்துக் கொண்டிருக்கும். அச்சக்தியின் சிலபாகம் பாதங்களின் வழியாய் வெளிப்பட்டுக்கொண்டு மிருக்கும். ஆதலால் சிரேயசினைப்பெற விரும்புவோர் ஒவ்வொருவரும் குருவின் பாத கமலசேவையைச் செய்வார்களாயின், அப்பாதவாயிலாக வெளிப்படும் சிற்சத்தியின் அடைவால் எல்லா நலமும் எய்தலாம். நமஸ்காரஞ்செய்வாராயின், அவரிடத்துள்ள சக்தியானது பாதங்களின் வழியாய் வணங்குவோரது உச்சி, புருவநடு, மார்பு, கைவிரல்நுனிகள் முதலியவற்றின் வழியாக அவர்களிடத்துப் பிரவேசிக்கும். அவருக்குப் பிரியம்

வர நடந்தால் அவர்* கருணை மிகுதியோடு பார்க்கும் திருஷ்டியினாலும், இவர்கள் சிரத்தில் ஸ்பரிசித்தலினாலும், 'இவனுக்கு நலமுண்டாகுக' என்று எண்ணுதலாலும், ஆசீர்வதித்தலாலும், விசேஷசக்தியானது இவர்களிடத்திற் பிரவேசித்துப் பிரகாசிக்கும். இவர்களது சற்பாவனையானது அதிகரிக்குமாயின், அற்பப்பிரகாசமுள்ள ஓர் சிறிய விளக்

---

* இவ்வாறு குருவானவர் கருணையோடு சிஷ்யனது பாபங்கள் நீங்கும்படி பார்த்தல் முதலியவற்றையே குருதீக்ஷை யென்பர். அந்தத் தீக்ஷையானது சாக்ஷுஷீ (பார்வையினாலாவது) ஸ்பரிசதீக்ஷா (சிரத்தில் கைவைத்தன் முதலிய பரிசத்தாலாவது), வாசகீ (வாக்கினால் ஆசீர்வதித்தல் உபதேசித்தன் முதலியவற்றாலாவது), மானஸீ (பாவித்தலாலாவது), சாஸ்திரீ (நூல்கற்பித்தலாலாவது), யோகதீக்ஷா (பிராணாயாமாதி தாரணையோகத்தினால் சிஷ்யனது உள்ளத்துப் பிரவேசித்துச் செய்வது), ஹௌத்ரீ (குண்டமண்டலாதிகளை மனதினாற் பாவித்துச் செய்வதான ஞானவதீ என்பதும், குண்டமண்டலாதி புறச்சாதனங்களைக்கொண்டு செய்வதான கிரியாவதீ யென்பதும்) என்று அநேகவகையினதாகும். दीयते विमलं ज्ञानं क्षीयते कर्मवासना तेन दीक्षेति प्रोक्ता ॥ விமலமாகிய ஞானம் கொடுக்கப்படுகின்றது; கர்மவாசனை நசிக்கின்றது; அதனால் தீக்ஷை யெனப்படுகின்றது." இத்தீக்ஷைக்குரிய அதிகாரியான சிஷ்யனது லக்ஷணங்களை இந்நூலின் ௩௦அ-வது முதலிய சுலோகங்களாலும், ஸ்ரீ சிவஞானபோதம் ௧௧-ம் சூத்திரத்தின் சூந்துவப்பிரகாசிகையுரையின் குறிப்புரையிற் காட்டப்பட்டுள்ள சுருதியாகமவசனங்களாலும் அறிக.

கினின்றும் கொளுத்தப்பட்ட ஓர் பெரிய தீவர்த்தியானது அதனினும் அதிகப்பிரகாசமுடையதாவதுபோல, அக்குரு வின் வாயிலாக ஈசுவரசக்தியானது விசேஷமாய்ப் பிரவே சித்து, அவரிடத்திருப்பதினும் அதிகப்பிரகாசமுடைய தாகும்.

இதனாற்றான், குருவே சிறந்தவர் அவரையின்றி எவ் விதத்தாலும் எவ்விடத்தும் ஜீவர்களுக்கு உஜ்ஜீவனம் கிடை யாது என்று இந்நூலோடு வேதாகமபுராணேதிகாசாதிக ளும் முரச (பறைய)றைகின்றன.

ஆதலால் உலகத்தில் எம்மதத்தரும் எப்படிப்பட்ட வரும் குருபக்திசெய்யவேண்டிய தாவசியகமாம்.

அத்தன்மைய குருபக்தி சித்திக்கவேண்டுமாயின், தினந்தோறும் இந்நூலினைப் பாராயணஞ் செய்துவருவார்க ளானால், அப்புண்ணியவிசேஷத்தாலும், இந்நூலின் அர்த் தவடிவ குருப்பிரபாவத்தினை அடிக்கடி மனதிற்கொள்ளுத லாலாகும் சம்ஸ்காரத்தினாலும் வெகு சுலபமாய்க் குருபக்தி யுண்டாய்விடும். அதனாலடையும் பிரயோஜனத்திற்கும் எல்லையில்லையென்பது நிச்சயம்.

---

# ஸ்ரீ சற்குருஸ்துதி.

लक्ष्मीनाथसमारंभां श्रीरामदासमध्यमां ।
अस्मदाचार्यपर्यंतां वन्दे गुरुपरंपराम् ॥

எவனதின் னருளால் யானுமிவ் வுலகின்ப நீத்தேன்
எவனதின் னருளான் மேலே யெய்திடு நலமும் வேண்டேன்
எவனதின் னருளா லீண்டே யேகனு யிலகா நின்றேன்
அவனதின் னருளாம் பாத வற்புத மியம்பற் காமே. (க)

எவன்முகத் தினியசொல்லா னின்னருள் சுரக்தல் காட்டும்
எவன்முகத் தீசனும மிருதய முருகச் செய்யும்
எவன்முகத் துபதேசமிங் கெய்தரு பதஞ்சேர்ப் பிக்கும்
அவன்மிக வழகார் விஷ்ணு வருட்குரு நாதனவன். (உ)

ஈசன தியல்பை யார்க்கு மெடுத்துரை செயாற்றன் மிக்கான்
கூசிடா தெவருந் தன்னைக் குறுகிடச் செய்யு நேயன்
பாசம தொழிக்குந் தன்மை பரமதர் மமதா யுள்ளான்
நாசமி றற்பதத்தை நண்ணிய விஷ்ணு நாதன். (ங)

சத்தினை நன்குணர்ந்து சன்மய மாகி நின்று
சத்தினைச் செவ்வே தம்மைச் சார்ந்தவர்க் குபதேசித்து
சத்தின துருவமாக்குந் தன்மையாற் சற்குருப்பேர்
மெய்த்திறந் தன்னைக் காட்டும் வியன்குரு சரணம் போற்றி.

---

குரவனே பிரமன் மாயோன் குணமுறு முருத்திரன் மெய்க்
குரவனே மகேச்சு ரன்சீர் கொளுஞ்சதா சிவனு மாவன்
குரவனே சச்சித்தின்பக் கூடத்தப் பிரம மந்தக்
குரவனேர் மிகுத்த பாதங் கொண்டவர் கொண்டார் வீடே.

குரவன்றன் பாததீர்த்தங் கோதிலாக் கங்கை யாகுங்
குரவன்றன் பாததீர்த்தங் கொலைமுதற் பாவம் போக்குங்
குரவன்றன் பாததீர்த்தங் கொடிய வஞ்ஞான நீக்குங்
குரவன்றன் பாததீர்த்தங் கொண்டவர் பெருமை யென்னே.

குரவனற் பூசை செய்வோர்க் குறுகியே யவர்க டம்மைக்
குரவரென் றெணிப்பூ சிப்போர் கூறரு பதம தெய்திற்
குரவனற் பூசை செய்வோர் குறுகிடும் பதத்தோ டந்தக்
குரவனற் பெருமை யுந்தான் குறித்திடப் படுமோ வம்மா.

குரவனற் பாத பீடங் கொண்டுமே பூசிப் போர்கள்
விரவுதற் கரிய லோக மேவுவ ரொன்னி லந்தக்
குரவனற் பாதப் போதை குதுகுலத் தொடுபூ சிப்போர்
விரவுனற் பதமீ தென்று விளம்பவு மெம்மா லாமோ. (ச)

குரவனற் பாததீர்த்தங் கோடிகங் கையாதி யாகும்
குரவனற் பாததூளி கோடிநற் றலங்க ளாகும்
குரவனற் பாதபீடங் கூறுமக் கயிலை யாகும்
குரவனற் பாதப் போது கோடிமெய் மூர்த்தி யாகும், (ரு)

குரவனற் பார்வை தன்னாற் குலைந்திடும் பாவ மெல்லாம்
குரவனற் கையாற் றீண்ட குளிர்ந்து மூத்தாப நீங்கும்
குரவனன் மனத்தா னோக்கக் கோடிநற் குணங்க ளுண்டாம்
குரவனல் வாக்கினாலே குறுகிடா தவித்தை நீங்கும். (சு)

(ஜாபாலதரிசனோபநிடதம்.)

பரமநன் ஞானயோக பரனெனும் பெரியோர் தங்கள்
வரமிகு பாதப்போதை மகிழ்வுடன் கழுவு நீரோ
நரர்செயும் பாவநீங்கி நன்மன மடைதற் கேற்ற
வரியமெய்த் தீர்த்தமாக வறைந்திடும் வேதத் துச்சி.

வேறு.

விளக்கது தன்பால் வந்து மேவிய திரியிற் றூவி
விளக்கெனத் தானுச் செய்யு மேன்மைய தாகு மாங்கே
துளக்கமின் மனத்த னாசான் சூழதி காரி தம்மை
அளக்கலில் ஞானச் சோதி யாக்குவ னழகி தந்தோ. (க)

தன்னிடஞ் சார்ந்த வொன்றைத் தன்மய மாக்குந் தீபோற்
றன்னடி சார்வார் தம்மைத் தன்மய மாக்கு மாசான்
பொன்னடி போற்று வார்கள் புகழொடெந் நலமு மெய்தி
இன்னலில் பரமாநந்த மெய்திடற் கைய மின்றே. (உ)

வேதமுதற் கலைதோ ராசிரியனாகி விஷ்ணுவின்
மெய்ப் பத்த னாகி;
ஏதமுறு மற்சராதி யில்லோனா யியலியோக
வுணர்ச்சி யெய்தி;
ஓதியோக நிட்டையுறு மியோகான்மா
வொண்குருவின் பத்தி யோடு
சேதனநல் லறிவுமுற்றால் குருவென்னச்
செப்பிடுமா லவனை வேதம். (க)

குகரமந் தகார மென்னக் கூறுமஞ் ஞான மாகும்
நகுருகா ரமத்தைப் போக்கும் ஞானநல் லொளியா முள்ளக்
குகையிருள் கெடுத்த லாலே குருவெனக் கூற லாகும்
தகுமுறை வழிபட் டோர்க்கே தருவனல் ஞான மன்னோன்.

பரமமாம் பிரம மேலாப் பகர்ந்திடு குருவே யாவன்
பரகதி குரவன் றானே பரவித்தை குருவே யாவன்
பரதன மேலாங் காட்டை பராயணங் குருவே யாவன்
குருதர குருவு மாவன் கூறுப தேசச் சீரான். (உ)

குருவென வுணர்க்கி னோர்காற் குறுகிடா தொழியும் பந்தம்
ஒருவிடு மக்க ணத்தே யுற்றபல் பிறப்பின் பாவம்
சருவகா மங்க டம்மைத் தந்திடு மன்றி யெல்லாப்
புருடார்த்த சித்தி பொருந்துதற் கைய மின்றே. (௩)

॥ ॐ ॥

॥ श्रीगणेशशारदासद्गुरुमंगलमूर्तिभ्यो नमः ॥

यं ब्रह्म वेदांतविदो वदंति परं प्रधानं पुरुषं तथान्ये॥
विश्वोद्गतेः कारणमीश्वरं वा तस्मै नमो विघ्ननिवारणाय ॥ १ ।

ओं अस्य श्रीगुरुगीतामालामंत्रस्य भगवान् सदाशिव ऋषिः।
विराट् छंदः ॥ श्रीगुरुपरमात्मा देवता ॥ हं बीजं ॥ सः शक्तिः
सोहं कीलकं ॥ श्रीगुरुकृपाप्रसादासिध्यर्थे जपे विनियोगः ॥

अथ करन्यासः ॥

ओं हं सां सूर्यात्मने अंगुष्ठाभ्यां नमः ॥
ओं हं सीं सोमात्मने तर्जनीभ्यां नमः ॥
ओं हं सूं निरंजनात्मने मध्यमाभ्यां नमः ॥
ओं हं सैं निराभासात्मने अनामिकाभ्यां नमः ॥
ओं हं सौं अतनुसूक्ष्मात्मने कनिष्ठिकाभ्यां नमः ॥
ओं हं सः अव्यक्तात्मने करतलकरपृष्ठाभ्यां नमः ॥

॥ इति करन्यासः ॥

अथ हृदयादिन्यासः ॥

ओं हं सां सूर्यात्मने हृदयाय नमः ॥
ओं हं सीं सोमात्मने शिरसे स्वाहा ॥

ओं हं सूं निरंजनात्मने शिखायै वषट् ॥

ओं हं सैं निराभासात्मने कवचाय हुं ॥

ओं हं सौं अतनुसूक्ष्मात्मने नेत्रत्रयाय वौषट् ॥

ओं हं सः अव्यक्तात्मने अस्त्राय फट् ॥

॥ इति हृदयादि न्यासः ॥

अथ ध्यानम् ॥

हंसाभ्यां परिवृत्तपत्रकमलैर्दिव्यैर्जगत्कारणं
विश्वोत्कीर्णमनेकदेहनिलयं स्वच्छन्दमानन्दकम् ।
आद्यंतैकमखंडचिद्घनरसं पूर्णं ह्यनंतं शुभं
प्रत्यक्षाक्षरविग्रहं गुरुवरं ध्यायेद्विभुं शाश्वतम् ॥ १ ॥
विश्वं व्यापिनमादिदेवममलं नित्यं परं निष्कलं
नित्योद्बुद्धसहस्रपत्रकमले लुप्ताक्षरे मंटपे ।
नित्यानंदमयं सुखैकनिलयं नित्यं शिवं स्वप्रभं
ध्यायेद्धंसपरं परात्परतरं स्वच्छंदसर्वागमम् ॥ २ ॥
ऊर्ध्वाम्नायगुरोः पदं त्रिभुवनोंकाराख्यसिंहासनं
सिद्धाचारसमस्तवेदपठितं षट्चक्रसंचारिणं ।

अद्वैतस्फुरदग्निमेकममलं पूर्णप्रभाशोभितं
शांतं श्रीगुरुपंकजं भज मनश्चैतन्यचंद्रोदयम् ॥ ३ ॥
नमामि सद्गुरुं शांतं प्रत्यक्षं शिवरूपिणम्
शिरसा योगपीठस्थं मुक्तिकामार्थसिद्धिदम् ॥ ४ ॥
प्रातः शिरसि शुक्लाब्जो द्विनेत्रं द्विभुजं गुरुं ।
वराभयकरं शांतं स्मरेत्तन्नामपूर्वकम् ॥ ५ ॥
प्रसन्नवदनाक्षं च सर्वदेवस्वरूपिणम् ।
तत्पादोदकजा धारा निपतंती स्वमूर्द्धनि ॥ ६ ॥
तया संक्षालयेद्देहे ह्यंतर्बाह्यगतं मलं ।
तत्क्षणाद्विरजो भूत्वा जायते स्फटिकोपमः ॥ ७ ॥
तीर्थानि दक्षिणे पादे वेदास्तन्मुखमाश्रिताः ।
पूजयेदर्चितं तं तु तदभिध्यानपूर्वकम् ॥ ८ ॥
सहस्रदलपंकजे सकलशीतरश्मिप्रभं
वराभयकरांबुजं विमलगंधपुष्पांबरम् ।
प्रसन्नवदनेक्षणं सकलदेवतारूपिणम्
स्मरेच्छिरसि हंसगं तदभिधानपूर्वं गुरुम् ॥ ९ ॥

॥ इति ध्यानम् ॥

॥ मानसोपचारैः श्रीगुरुं पूजयित्वा ॥

लं पृथिव्यात्मने गंधतन्मात्राप्रकृत्यानंदात्मने श्रीगुरुदेवाय नमः
पृथिव्यात्मकं गंधं समर्पयामि ॥

हं आकाशात्मने शब्दतन्मात्राप्रकृत्यानंदात्मने श्रीगुरुदेवाय नमः
आकाशात्मकं पुष्पं समर्पयामि ॥

यं वाय्वात्मने स्पर्शतन्मात्राप्रकृत्यानंदात्मने श्रीगुरुदेवाय नमः
वाय्वात्मकं धूपं समर्पयामि ॥

रं तेजआत्मने रूपतन्मात्राप्रकृत्यानंदात्मने श्रीगुरुदेवाय नमः
तेजआत्मकं दीपं समर्पयामि ॥

वं अबात्मने रसतन्मात्राप्रकृत्यानंदात्मने श्रीगुरुदेवाय नमः
अबात्मकं नैवेद्यं समर्पयामि ॥

सं सर्वात्मने सर्वतन्मात्राप्रकृत्यानंदात्मने श्रीगुरुदेवाय नमः
सर्वात्मकान् सर्वोपचारान् समर्पयामि ॥

॥ इति मानसपूजा ॥

अथ श्रीगुरुमालामंत्रः ॥

ओं नमः श्रीगुरुदेवाय परमपुरुषाय सर्वदेवतावशीकराय
सर्वारिष्टविनाशनाय सर्वमंत्रच्छेदनाय त्रैलोक्यं वशमानय स्वाहा ॥

---

|| ௐ ||

ஸ்ரீ பிரஹ்மாநந்தஸ்வாமிநே நம:

எவரை, வேதாந்தமுணர்ந்தவர்கள், பிரஹ்மம் என்றும், பரம் என்றும், பிரதானம்(பிரகிருதி)என்றும், புருஷன் என்றும், விசுவ சிருஷ்டிக்குக் காரணமென்றும், ஈசுவரனென்றும், அப்படியே பிறவுமாகச் சொல்லுகின்றனரோ, அப்படிப்பட்ட விக்கினநிவாரணஞ் செய்பவருக்கு நமஸ்காரம்.

# தியானம்.

க. ஹம் ஸ: இரண்டிேனாடும் சூழ்ந்த இதழ்களையுடைய திவ்விய கமலங்களோடும், ஜகத்காரணமும், விசுவமாய் வெளிப்பட்ட அநேக தேகங்களிலிருப்பதும், தமதிஷ்டப்படியிருப்பதும், ஆநந்தத்தைச் செய்வதும், ஆதியிலும் அந்தத்திலும் ஏகமானதும், அகண்டசித்கன (ஞானம் நெருங்கிய)ரஸவடிவமும், பூர்ணமும், அநந்தமும், சுபமும், பிரத்தியக்ஷமான அக்ஷர(அழிவற்ற)விக்கிரகமும், விபுவும், சாசுவதமுமான குருபதத்தினைத் தியானிக்க. (க)

உ. விசுவ(சர்வ)வியாபியும், ஆதிதேவனும், அமலமும், நித்தியமும், பரமு(மேலானது)ம், நிஷ்களமு(கலையில்லாதது)ம், என்றும் மலர்வுடைய ஆயிரம் இதழ்களுடைய கமலமும், அக்ஷரங்களின்றியதுமான மண்டபத்திலிருக்கும் நித்தியாநந்தமயமும், சுகமொன்றனையே இடமாகவுடையதும், நித்தியமான சிவ(மங்கல)மும், சொப்பிரகாசமும், ஹம்ஸத்தின் மேலானதும், பரத்தினும் அதிக பரமானதும், சொச்சந்தமான சகல வரவினதுமான குருவின் பாதத்தினைத் தியானிக்க, (உ)

௩. வேதத்தினுச்சியிலுள்ள குருவின் பதமும், மூன்று புவனமாகிய ஓங்காரசிங்காசனத்துள்ளதும், சித்தாசாரமுடைய சகல வேதத்தினலும் படிக்கப்பட்டதும், ஷட்சக்கிரங்களில் சஞ்சரிப்பதும், அத்வைதமாகி விளங்கும் அக்கினிவடிவமும், ஏகமும், அமலமும், பூர்ணப்பிரபையினல் சோபிப்பதும், சாந்தமும், மனசைதன்னியசந்திரோதயமுமான ஸ்ரீகுருபாததாமரையினைப்பஜி. (௩)

௪. சாந்தரும், பிரத்தியக்ஷரும், சிவவடிவினரும், யோகபீடத்திருப்பவரும், முக்தி காமம் அர்த்த மென்பவற்றைத் தருபவருமான சற்குருவினைச் சிரசினல் வணங்குகிறேன். (௪)

௫-௬. சிரத்தில் வெண்மையான கமலத்தில் இரண்டு நேத்திரமுடையவரும், இரண்டு புஜத்தினரும், வராபயகரத்தினரும், சாந்தரும், மலர்ந்த திருமுகமும்நேத்திரங்களுமுள்ளவரும், சர்வதேவஸ்வருபியுமான குருவினை அவர் திருநாமபூர்வகமாகக் காலையில் ஸ்மரிக்குக. அவர் பாதோதகத்தினின்று பிறந்ததான தாரையானது தனது சிரத்துச்சியில் விழுகின்றது. (௫-௬)

௭. அதனல் தேகத்தில் உள்ளும் வெளியுமிருக்கும் மலத்தினைச் செவ்வையாய்க் கழுவுக. அக்கணமே, அழுக்கு நீங்கியவனய் ஸ்படிக மொத்தவனகின்றன். (௭)

௮. தீர்த்தங்கள் அவருடைய வலது திருப்பாதத்திலுள. வேதங்கள் அவர் திருமுகத்தை யாசிரயித்திருக்கின்றன. ஆதலால் அர்ச்சிக்கப்படுபவரான அவரை அவரது தியானபூர்வகமாகப் பூஜிக்குக.

௯. ஆயிரமிதழ்த்தாமரையில் சகல சீதகிரணமுள்ள காந்தியினரும், வரம் அபயம் அமைந்த கரமலர்களுடையவரும், பரிசுத்தமான கந்தபுஷ்ப வஸ்திரங்களையுடையவரும், மலர்ந்த திருமுகமும் நேத்திரங்களுமுடையவரும், சகல தேவதாவடிவினரும், ஹம்ஸத்திலிருப்பவருமான குருவை அவரது பெயரோடு ஸ்மரிக்குக. (௯)

ஸ்ரீகுருவேநம:

॥ ओ३म् ॥

॥ ॐ श्रीगणेशशारदासद्गुरुभ्यो नमः ॥

# ॥ श्रीगुर्वष्टोत्तरशतनामावलिः ॥

ॐ आनन्दवपुषे नमः १

,, आचार्याय नमः २

,, आदिमध्यान्तरहिताय नमः ३

,, दयानिधये नमः ४

,, सत्यज्ञानानन्तरूपाय नमः ५

,, सदाधाराय नमः ६

,, योगयोनये नमः ७

,, प्रज्ञानघनाय नमः ८

,, पंचकोशविलक्षणाय नमः ९

,, कोटिकन्दर्पसुन्दराय नमः १०

,, कृपावीक्षणाय नमः ११

,, अतनवे नमः १२

| | |
|---|---|
| ओं अनन्ताय नमः | १३ |
| ,, अजाय नमः | १४ |
| ,, इच्छानिच्छाविरहिताय नमः | १५ |
| ,, अभोक्त्रे नमः | १६ |
| ,, अद्वन्द्वाय नमः | १७ |
| ,, अचिन्त्याय नमः | १८ |
| ,, गुणत्रयविवर्जिताय नमः | १९ |
| ,, गुहाशयाय नमः | २० |
| ,, ज्ञातृज्ञानज्ञेयसाक्षिणे नमः | २१ |
| ,, निरञ्जनाय नमः | २२ |
| ,, नित्यबुद्धाय नमः | २३ |
| ,, अग्रगण्याय नमः | २४ |
| ,, अक्षराय नमः | २५ |
| ,, उदासीनाय नमः | २६ |
| ,, उपदेष्ट्रे नमः | २७ |

ओं अमलाय नमः २८
,, ज्ञानदेशिकाय नमः २९
,, तत्त्वमस्यादिवाक्यार्थलक्ष्याय नमः ३०
,, निष्कळाय नमः ३१
,, तारकाय नमः ३२
,, तत्त्वबोधकाय नमः ३३
,, नित्यशुद्धाय नमः ३४
,, नित्यमुक्ताय नमः ३५
,, ज्ञानलिंगाय नमः ३६
,, स्वयंप्रकाशाय नमः ३७
,, जन्मजरामृत्युनिवारकाय नमः ३८
,, निर्लेपाय नमः ३९
,, अद्भुतचारित्राय नमः ४०
,, अद्वेष्ट्रे नमः ४१
,, ऊर्ध्वरेतसे नमः ४२

ओं सदसद्भिरहिताय नमः ४३
,, साधुगम्याय नमः ४४
,, सर्वात्मने नमः ४५
,, शान्ताय नमः ४६
,, अनन्तशक्तये नमः ४७
,, निष्प्रपंचाय नमः ४८
,, ईश्वराणामधीशाय नमः ४९
,, वेदान्तवेद्याय नमः ५०
,, षडूर्मिवर्जिताय नमः ५१
,, षड्भावरहिताय नमः ५२
,, अमृताय नमः ५३
,, अन्तर्यामिणे नमः ५४
,, अपरिच्छेद्याय नमः ५५
,, क्षमिणे नमः ५६
,, कूटस्थाय नमः ५७

ओं कैवल्यदायकाय नमः ५८
,, कपटवर्जिताय नमः ५९
,, कालातीताय नमः ६०
,, अवस्थात्रयसाक्षिणे नमः ६१
,, अप्रमेयाय नमः ६२
,, अद्वयाय नमः ६३
,, अव्यक्ताय नमः ६४
,, गूढाय नमः ६५
,, ग्रन्थित्रयविमोक्षणाय नमः ६६
,, चिन्मात्राय नमः ६७
,, ज्ञानगम्याय नमः ६८
,, ब्रह्मानन्दाय नमः ६९
,, भवाब्धितारणाय नमः ७०
,, परात्पराय नमः ७१
,, तत्त्वमर्थाय नमः ७२

ओं दुष्टदूराय नमः ७३

,, दुराचारनाशनाय नमः ७४

,, आभास्वराय नमः ७५

,, विधिविष्णुशिवाकृतये नमः ७६

,, असल्लक्षणविलक्षणाय नमः ७७

,, अजडाय नमः ७८

,, अपारसंसारार्थविघट्टनाय नमः ७९

,, अमन्यवे नमः ८०

,, अमोघवैभवाय नमः ८१

,, अभयंकराय नमः ८२

,, वरदाय नमः ८३

,, मुक्तिरूपाय नमः ८४

,, शाश्वताय नमः ८५

,, अखण्डमहिमाम्भोधये नमः ८६

,, अखण्डबोधाय नमः ८७

ओं मनोवाचामगोचराय नमः ८८
,, परिपूर्णात्मने नमः ८९
,, बाह्यांतरस्थिताय नमः ९०
,, भक्तिश्रद्धाध्यानगम्याय नमः ९१
,, निरहंकृतये नमः ९२
,, निर्विकाराय नमः ९३
,, निर्वैराय नमः ९४
,, लक्ष्यालक्ष्यवर्जिताय नमः ९५
,, निर्विकल्पाय नमः ९६
,, अव्ययाय नमः ९७
,, अनन्तरूपाय नमः ९८
,, अनुत्तमाय नमः ९९
,, दक्षिणाभिमुखाय नमः १००
,, अद्भुताय नमः १०१
,, अलिंगाय नमः १०२

ओं निःसंगाय नमः १०३
,, निर्वाणसुखदाय नमः १०४
,, निगमातीताय नमः १०५
,, नित्याय नमः १०६
,, धर्मवतांवराय नमः १०७
,, श्रीगुरुमूर्त्तये नमः १०८

---

नानाविधपारिमळमंत्रपुष्पाणि समर्पयामि.

॥ इति श्रीगुर्वष्टोत्तरशतनामावलिः ॥



॥ ॐ ॥

ஸ்ரீகணேசாய நம:

# ॥ श्री गुरुगीता ॥

# ஸ்ரீ குருகீதை.

## ॥ अथ प्रथमोऽध्यायः ॥

## முதல் அத்தியாயம்.

---

### உரைமங்கலம்.

சிவனெழிற் கணேசன் றேவி திருவமர் விஷ்ணு பானு
தவமிகு பிரம ஞானி சகலருந் தானே யாகும்
எவனினற் குரவன் பாத விணைமலர் முடிமேற் கொண்டு
பவமொழி குருகீ தைக்குப் பகருவ னுரையை யானே.

### நூன்மங்கலம்.

अचिन्त्याव्यक्तरूपाय निर्गुणाय गुणात्मने ।
समस्तजगदाधारमूर्तये ब्रह्मणे नमः ॥ १ ॥

சிந்தித்தற்கரிய * கூ அவ்வியக்தவடிவினதும், நிர்க்கு

---

* க. வெளிப்படுதலில்லாத வடிவினையுடையது; அதாவது இந்திரியமுதலியவற்றிற்கு விஷயமாகாதது.

ணமும், குணசொரூபமும், சகலஜகத்திற்கும் ஆதாரவடிவ முமாகிய பிரஹ்மத்திற்கு நமஸ்காரம். (க)

॥ ऋषय ऊचुः ॥

सूत सूत महाप्राज्ञ निगमागमपारग ।
गुरुस्वरूपमस्माकं ब्रूहि सर्वमलापहम् ॥ २ ॥

ருஷிகள் சொல்லலாயினர் :—சூதமுனிவரே! சூதமுனிவரே! மிகுந்த புத்தியுடையவரே! வேதாகமங்களின் கரை கடந்தவரோ! சர்வமலங்களையும் போக்கும் குருவின் சொரூபத்தை எங்களுக்கநுக்கிரகிப்பீராக. (௨)

यस्य श्रवणमात्रेण देही दुःखाद्विमुच्यते ।
येन मार्गेण मुनयस्सर्वज्ञत्वं प्रपेदिरे ॥ ३ ॥

எதைக் கேட்டமாத்திரத்தினால் தேகிகள் துக்கங்களினின்றும் விடுபடுவார்களோ, எந்த மார்க்கத்தைக் கைப்பற்றி முனிவர்கள் சர்வஞ்ஞத்தன்மையை யடைந்தார்களோ,

यत्प्राप्य न पुनर्याति नरः संसारबन्धनम् ।
तथाविधं परं तत्त्वं वक्तव्यमधुना त्वया ॥ ४ ॥

நரன் எதை யடைந்து சம்சாரபந்தத்தை மீண்டும் அடையமாட்டானே, அந்தவிதமாகிய மேலான தத்துவமானது இப்போது தம்மாற் சொல்லப்படவேண்டும். (௩)

गुह्याद्गुह्यतमं सारं गुरुगीता विशेषतः ।
त्वत्प्रसादाच्च श्रोतव्या तत्सर्वं ब्रूहि सूत नः ॥ ५ ॥

இரகசியத்தினும் மிக்க இரகசியமும் சாரமுமான குரு கீதை விசேஷமாகத் தமது பிரசாதத்தாற் கேட்கத்தக்க தாம். ஆதலாற் சூதமுனிவரே! அவ்வெல்லாவற்றையும் அடியேங்களுக்கு அநுக்கிரகித்தல்வேண்டும். (ரு)

इति संप्रार्थितस्सूतो मुनिसंघैर्मुहुर्मुहुः ।
कुतूहलेन महता प्रोवाच मधुरंवचः ॥ ६ ॥

இவ்வாறு முநிவர்கணங்களால் அடிக்கடி செவ்வையாய்ப் பிரார்த்திக்கப்பட்ட சூதர் மிகுந்த சந்தோஷத்தோடு (அவர் களைப் பார்த்து) இனிமையுள்ள வாக்கியங்களைக் கூறலா யினர். (சு)

॥ सूत उवाच ॥

श्रुणुध्वं मुनयस्सर्वे श्रद्धया परया मुदा ।
वदामि भवरोगघ्नीं गीतां मातृस्वरूपिणम् ॥ ७ ॥

சூதர் சொல்லலானர்:— முநிவர்களே! பவரோகத் தினைக் கெடுப்பதும் அன்னைவடிவினதுமான கீதையைச் சொல்லுகிறேன். நீங்களெல்லோரும் மேலான சிரத்தை யோடும் மிகுந்த சந்தோஷத்தோடும் கேட்பீர்களாக. (எ)

पुरा कैलासशिखरे सिद्धगन्धर्वसेविते ।
तत्र कल्पलतापुष्पमन्दिरेत्यंतसुन्दरे ॥ ८ ॥

பூர்வம் சித்தர்கந்தர்வர்களால் சேவிக்கப்பட்ட அக் கைலாயசிகரத்தில் கற்பகவிருக்ஷகொடிபுஷ்பங்களாலாக்கிய மிக அழகிய வீட்டில், (௮)

व्याघ्राजिने समासीनं शुकादिमुनिवन्दितं ।
बोधयन्तं परं तत्त्वं मध्ये मुनिगणं क्वचित् ॥ ९ ॥

நடுவில் புலித்தோலில் உட்கார்ந்துகொண்டிருப்பவரும், சுகர்முதலிய முனிவர்களால் தொழப்பட்டவரும், மேலான தத்துவத்தை முனிவர்கணங்கட்கு உபதேசிப்பவருமான (சங்கரனை) ஓர் சமயத்தில், (௯)

प्रणम्रवदना शश्वन्नमस्कुर्वन्तमादरात् ।
दृष्ट्वा विस्मयमापन्ना पार्वती परिपृच्छति ॥ १० ॥

மிக்குனிந்த முகத்தினராய் அடிக்கடி ஆதரவோடு நமஸ்கரிக்கின்றவராக அவரைப் பார்த்து வியப்படைந்து பார்வதிதேவியார் கேட்கலாயினார். (௰)

॥ पार्वत्युवाच ॥

ओं नमो देव देवेश परात्पर जगद्गुरो ।
त्वां नमस्कुर्वते भक्त्या सुरासुरनराः सदा ॥ ११ ॥

பார்வதியார் கேட்கலாயினர்:— *உ. பிரணவசொரூபியாகிய தேவனே! தேவேசனே! *ங. பராற்பரனே! உலககுருவே! நமஸ்காரம் தம்மைப் பக்தியோடு சுரர் அசுரர் நரர் எப்போதும் வணங்குகின்றனர். (கக)

विधिविष्णुमहेन्द्राद्यैर्वन्द्यः खलु सदा भवान् ।
नमस्करोषि कस्मै त्वं नमस्काराश्रयः किल ॥ १२ ॥

பிரஹ்மா விஷ்ணு மகேந்திரன் முதலானவர்களால் எப்போதும் நிச்சயமாக வந்திக்கத்தக்கவர் தாம். அப்படியிருக்கத் தாம் யாரை நமஸ்கரிக்கிறீர்? நமஸ்காரத்திற்கிடமானவர் தாமன்றோ? (கஉ)

दृष्ट्वैतत्कर्म विपुलमाश्चर्यं प्रतिभाति मे ।
किमेतन्न विजानेऽहं कृपया वद मे प्रभो ॥ १३ ॥

---

* உ. பிரணவசொரூபி யென்பதனை மாண்டூக்கியாதிசுருதிகளிலும், விசாரசாகரத்திலும் காண்க.

* ங. பரமையுள்ள அவ்வியக்தமுதலியவற்றிற் கெல்லாம் பரமாயுள்ளவன் அதாவது மேலானவற்றிற்கும் மேலானவன்

தமது இவ்வாசரணத்தினைப் பார்த்து எனக்கு மிகவு மாச்சரிய முண்டாகின்றது. இது எதன்பொருட்டென்று யான் அறியேன். பிரபுவே! கிருபையோ டெனக்குச் சொல்லியருள்வீராக. (௧௩)

भगवन् सर्वधर्मज्ञ व्रतानां व्रतनायकम् ।

ब्रूहि मे कृपया शंभो गुरुमाहात्म्यमुत्तमम् ॥ १४ ॥

* ௪. பகவானே! சர்வதர்மங்களு முணர்ந்தவரே! * ௫ சம்புவே! விரதங்களுக்கெல்லாம் விரதநாயக மும் உத்தமமுமான குருமான்மியத்தைக் கிருபையோடெ னக்கருள்வீராக. (௧௪)

केन मार्गेण भो स्वामिन् देही ब्रह्ममयो भवेत् ।

तत्कृपां कुरु मे स्वामिन्नमामि चरणौ तव ॥ १५ ॥

ஓ சுவாமி! தேகியானவன் எவ்வழியினால் பிரஹ்மம யமாகின்றானோ, அதனை யெனக்கருள்செய்வீராக. சுவாமி! தமது சரணங்களை நமஸ்கரிக்கின்றேன். (௧௫)

---

* ௪. பகம் என்பது சர்வஞ்ஞத்துவாதி ஐசுவரியம்; அவற் றையுடையவன் பகவான்.

* ௫. शम् சம்=சுகம்; அதற்கு भु: பு அதாவது இடமாயுள்ள வர்; சம்பு அதாவது சுகசொரூபி யென்பதாம்.

इति संप्रार्थितः शश्वन्महादेवो महेश्वरः ।
आनन्दभरितः स्वान्ते पार्वतीमिदमब्रवीत् ॥ १६ ॥

இவ்விதமாக அடிக்கடி செவ்வையாய்ப் பிரார்த்திக்கப் பட்ட மஹாதேவராகிய மஹேசுவரர் தனக்குள் ஆனந்த பரிதராய்ப் பார்வதிக்கிதனைச் சொல்லலாயினார். (௧௬)

॥ श्रीमहादेव उवाच ॥

न वक्तव्यमिदं देवि रहस्यातिरहस्यकम् ।
न कस्यापि पुरा प्रोक्तं त्वद्भक्त्यर्थं वदामि तत् ॥ १७ ॥

ஸ்ரீ மகாதேவர் சொல்லலாயினார் :—தேவி! இரகசியத்தினு மிரகசியமாகிய இது சொல்லத்தக்கதன்று; முன்னொருவருக்கும் சொல்லப்படவில்லை. அதனை உன்னுடைய பக்தியின்பொருட்டு (உனக்கு)ச் சொல்லுகிறேன். (௧௭)

मम रूपासि देवि त्वमतस्तत्कथयामि ते ।
लोकोपकारकः प्रश्नो न केनापि कृतः पुरा ॥ १८ ॥

தேவி! நீ யெனது வடிவமா யிருக்கிறாய். லோகோபகாரமான கேள்வியினைக் கேட்டாய். இது முன்னொருவராலும் கேட்கப்பட்ட தன்று. அதனால் நினக்கு அதனைக் கூறுகின்றேன். (௧௮)

* यस्य देवे परा भक्तिर्यथा देवे तथा गुरौ ।
तस्यैते कथिता ह्यर्थाः प्रकाशंते महात्मनः ॥ १९ ॥

எவனுக்குத் தெய்வத்தினிடத்து மேலான பக்தியிருக்கின்றதோ, தெய்வத்தினிடத்திற் போலக் குருவினிடத்துமிருக்கின்றதோ, அந்த மகாத்மாவிற்கே சொல்லிய இவ்வர்த்தங்கள் பிரகாசிக்கும். (கக)

यो गुरुस्स शिवः प्रोक्तो यश्शिवः स गुरुस्स्मृतः ।
विकल्पं यस्तु कुर्वीत स नरो गुरुतल्पगः ॥ २० ॥

குரு எவரோ அவர் சிவனெனப்படுகின்றார். சிவன் எவரோ அவர் குருவெனக் கருதப்படுகின்றார். (குரு வேறு சிவன் வேறு என்று) எவன் விகற்பத்தைச் செய்கின்றானோ, அந்நரன் குருவின் மனைவியைச் சேர்ந்தவனாகின்றான்.

दुर्लभं त्रिषु लोकेषु तच्छृणुष्व वदाम्यहम् ।
गुरुर्ब्रह्म विना नान्यः सत्यं सत्यं वरानने ॥ २१ ॥

அழகிய முகத்தினையுடைய பார்வதி! மூன்றுலகங்களிலும் அடைதற்கரியது யாதோ அதனைச் சொல்லுகின்றேன். கேள் குரு பிரஹ்மத்தைவிட அந்நியமில்லை. இது சத்தியம் சத்தியம். (உக)

---

* இது சுவேதாசுவதாசுருதிவாக்கியமாம்.

वेदशास्त्रपुराणानि चेतिहासादिकानि च ।
मंत्रयंत्रविद्यादीनि मोहनोच्चाटनादिकम् ॥ २२ ॥
शैवशाक्तागमादीनि ह्यन्ये च बहवो मताः ।
अपभ्रंशाः समस्तानां जीवानां भ्रांतचेतसाम् ॥ २३ ॥

வேதசாஸ்திர புராணங்களும், இதிகாச முதலியனவும், மந்திரயந்திரவித்தை முதலியனவும், மோகனம் உச்சாடனமுதலியனவும், சைவசாக்தாகமங்கள் முதலியனவும், மற்றுமுள்ள அநேக(சாங்கியாதி)மதங்களும் (குருவுண்மை தெரியாத) மயக்க உள்ளத்தினைப் பெற்றுள்ள சகல ஜீவர்களுக்கும் தவறுடையனவேயாம். (௨௨-௨௩)

जपस्तपो व्रतं तीर्थं यज्ञो दानं तथैव च ।
गुरुतत्त्वमविज्ञाय सर्वं व्यर्थं भवेत्प्रिये ॥ २४ ॥

பிரியமுள்ளவளே! குருவுண்மையை அறியாததினால் ஜபம், தவம், விரதம், தீர்த்தம், யாகம், அவ்வாறே தானம் என்பவை யாவும் வியர்த்தமாம். (௨௪)

गुरुबुध्द्यात्मनो नान्यत् सत्यं सत्यं वरानने ।
तल्लाभार्थं प्रयत्नस्तु कर्तव्यश्च मनीषिभिः ॥ २५ ॥

பார்வதி! *எ. குருஞானத்தினால் ஆத்மாவிற்கு

*எ. குருவானகுளும் ஞானத்தினால்.

வேறானதில்லை. இது சத்தியம்; சத்தியம். அதனைப்பெறுதற்பொருட்டுப் பிரயத்தினம் விவேகிகளால் செய்யத்தக்கதாம். (உரு)

गूढाविद्या जगन्माया देहश्चाज्ञानसंभवः ।
विज्ञानं यत्प्रसादेन गुरुशब्देन कथ्यते ॥ २६ ॥

உலகமாயை * அ. கூடமான அவித்தையாம்; தேகம் அஞ்ஞானத்தாலாகியதாம் என்னும் * க. விஞ்ஞானம் எவரது கிருபையா லுண்டாகின்றதோ, அவர் குரு வென்னுஞ் சொல்லாற் சொல்லப்படுகின்றார். (உசு)

यदंघ्रिकमलद्वंद्वं द्वंद्वतापनिवारकम् ।
तारकं भवसिंधोश्च तं गुरुं प्रणमाम्यहम् ॥ २७ ॥

எவரது பாததாமரைக ளிரண்டும் துவந்துவ (சுகதுக்காதி இருமைத்தாப)த்தை நீக்குவனவாயும், பவ (பிறவி)க் கடலைக் கடப்பிப்பனவாயு மிருக்கின்றனவோ, அத்தன்மைய குருவைப் பணிகின்றேன். (உஎ)

देही ब्रह्म भवेद्यस्मात् त्वत्कृपार्थं वदामि तत् ।
सर्वपापविशुद्धात्मा श्रीगुरोः पादसेवनात् ॥ २८ ॥

---

* அ. கூடம் = இரகசியம்.

* க. விஞ்ஞானம் = விசேஷஞானம்; அபரோக்ஷம்.

எக்காரணத்தினால் ஸ்ரீ குருவின் பாதசேவையினால் தேகி சர்வபாபங்களின்றும் * கO. விசுத்தவடிவனாய்ப் பிரஹ்ம மாவனே, அதனை நினக்கருளாற் கூறுகின்றேன்.

सर्वतीर्थावगाहस्य संप्राप्नोति फलं नरः ।
गुरोः पादोदकं पीत्वा शेषं शिरसि धारयन् ॥ २९ ॥

குருவின் பாதோதகத்தைப் பருகி, மிஞ்சியதைச் சிரசிற் றெளித்துக்கொண்டு, அதனால் நரன் சகல தீர்த்தங்களிலும் மூழ்கியதன் பயனை யடைகின்றான். (உகூ)

शोषणं पापपंकस्य दीपनं ज्ञानतेजसः ।
गुरोः पादोदकं सम्यक् संसारार्णवतारकम् ॥ ३० ॥

குருவின் பாதோதகம் செவ்வையாய்ப் பாபச்சேற்றை உலர்த்துவதும், ஞானதேஜஸை விளக்குவதும், சம்சார சமுத்திரத்தைக் கடத்துவதுமாம். (௩O)

अज्ञानमूलहरणं जन्मकर्मनिवारकम् ।
ज्ञानवैराग्यसिध्यर्थं गुरुपादोदकं पिबेत् ॥ ३१ ॥

---

* கO. விசுத்தம்=விசேஷ தூய்மை.

* அஞ்ஞானமாகிய மூலத்தைக் கெடுப்பதும், பிறப்பிற்கேதுவான கர்மத்தை யொழிப்பதுமாகிய குருபாதோதகத்தை ஞானவைராக்கியம் பெறுதற்பொருட்டுப் பருகுக.

गुरुपादोदकं पानं गुरोरुच्छिष्टभोजनम् ।
गुरुमूर्त्तेस्सदा ध्यानं गुरोर्नाम सदा जपः ॥ ३२ ॥

குருவின் பாதோதகத்தைப் பருகலும், குருவின் உச்சிஷ்டத்தைப் புசித்தலும், குருவடிவை யெப்போதும் தியானித்தலும், குருவின் நாமத்தை யெப்போதும் ஜபித்தலும் செய்தல்வேண்டும். (கஉ)

स्वदेशिकस्यैव च नामकीर्त्तनं भवेदनंतस्य शिवस्य कीर्तनम् ।
स्वदेशिकस्यैव च नामचिंतनं भवेदनंतस्य शिवस्य चिंतनम् ॥ ३३ ॥

தன் தேசிகரது நாமத்தைக் கீர்த்தித்தல் *கக. அநந்த

---

* கேவலஞ்ஞான மூலங் கேடுறச் செய்தலோடு
நீதுசெய் சன்மகர்மஞ் சிதைத்திடு மியல்பிற் றுகி
ஓதுவை ராக்யஞான முரிமையா யளிப்பதான
போதமார் குரவன் பாதப் புனிதநீர் பருகல் செய்வாம்

* கக. அநந்தம் = அந்தமில்லாமை. அந்தம் = பரிச்சேதம். அந்தம், அபாரம், அபரிச்சின்னம் என்பன ஒருபொருட்சொற்கள். இதனை விரிவாய் அறியவிரும்புவோர் ஸ்ரீ பாலபோதத்தின் முதல் உபதேசத்திற் காண்க.

ராகிய சிவனது கீர்த்தனமே யாகின்றது. தன் தேசிகரது நாமத்தைச் சிந்தித்தல் அநந்தராகிய சிவனது சிந்தனமே யாகின்றது, (௩௩)

† यत्पादरेणुवै नित्यं कोपि संसारवारिधौ ।
सेतुबंधायते नाथं देशिकं तमुपास्महे ॥ २४ ॥

எவருடைய பாத * ௧௨. ரேணுவாகிய ஒன்று * ௧௩. சம்சாரசமுத்திரத்திற் கணைபோ லாகின்றதோ, அத்தேசிக நாதனை நித்தியம் உபாசிப்பாம். (௩௪)

यदनुग्रहमात्रेण शोकमोहौ विनश्यतः ।
तस्मै श्रीदेशिकेन्द्राय नमोस्तु परमात्मने ॥ २५ ॥

எவரனுக்கிரகமாத்திரத்தினால் சோகமும் மோகமும் நாசமாகின்றனவோ, அந்த ஸ்ரீதேசிகேந்திரராகிய பரமாத்மாவிற்கு நமஸ்காரம். (௩௫)

---

† यत्पादाम्बुजरेणुर्वै घोरसंसारवारिधेः = எவருடையபாதாம்புயப் பொடி கோரமான சம்சாரசமுத்திரத்திற்கு என்றும் பாடம்.

* ௧௨. ரேணு = அணு ; துகள்.

* ௧௩. விரிகின்ற ஜலமயமானம் கடலோர மென்பதும்.

यस्मादनुग्रहं लब्ध्वा महदज्ञानमुत्सृजेत् ।
तस्मै श्रीदेशिकेंद्राय नमश्चाभीष्टसिद्धये ॥ ३६ ॥

எவரநுக்கிரகத்தைப் பெற்று, அதனால் * கசு. மகத்தாகிய அஞ்ஞானம் நீக்கப்படுகின்றதோ, அந்த ஸ்ரீ தேசிகேந்திரருக்கு * கரு. அபீஷ்டசித்தியின் பொருட்டு நமஸ்காரம். (௩௬)

काशीक्षेत्रं निवासश्च जान्हवी चरणोदकम् ।
गुरुर्विश्वेश्वरस्साक्षात् † तारकं ब्रह्मनिश्चयः ॥ ३७ ॥

குரவன் வசிக்குமிடம் காசிக்ஷேத்திரம். அவரது பாதோதகம் கங்கை. குருவானவர் சாக்ஷாத் விசுவேசுவரன். (அவர்வாக்கிலிருந்து வராநின்ற) பிரஹ்மநிச்சயம் * கசு. தாரகமாம். (௩௭)

गुरुसेवा गया प्रोक्ता देहः स्यादक्षयो वटः ।
तत्पादं विष्णुपादं स्यात्तत्र दत्तमनस्तलम् ॥ ३८ ॥

---

* கசு. மகத்து = பெரிது.

* கரு. அபீஷ்டசித்தி = விரும்பியதைப் பெறுதல்.

† मुक्ताः स्युस्तत्र वासिनः = அவணிருக்குமிடத்தில் வசிப்பவர் முக்தராகுவர் என்றும் பாடம்.

* கசு. தாரகம் = கடப்பிப்பது. அது பிரணவமந்திரத்திற் கோர்பெயர்.

குருசேவை கயையெனப்படும். அவர் தேகம் (அங்குள்ள) அக்ஷயமான வடவிருக்ஷமாம். அவர்பாதம் (கயையிலுள்ள) விஷ்ணுபாதமாம். அங்குத் தத்தஞ்செய்ய (கொடுக்க)ப்பட்ட மனம் வியாபகநிலையடைந்ததாம். (௩௮)

गुरुमूर्त्तिं स्मरेन्नित्यं गुरोर्नाम सदा जपेत् ।
गुरोराज्ञां प्रकुर्वीत गुरोरन्यन्न भावयेत् ॥ ३९ ॥

குரவன்வடிவத்தைத் தினமும் ஸ்மரித்தல்வேண்டும். குரவன் நாமத்தை எப்போதும் ஜபித்தல்வேண்டும். குருவினுடைய ஆஜ்ஞையைச் செய்யவேண்டும். குரவனுக் கந்நியமானவற்றைப் பாவிக்கலாகாது. (௩௯)

गुरुवक्त्रे स्थितं ब्रह्म प्राप्यते तत्प्रसादतः ।
गुरोर्ध्यानं सदा कुर्यात् ** पुरुषं स्वैरिणी यथा ॥ ४० ॥

குருவின் முகத்தில் பிரஹ்ம மிருக்கின்றது. அது அவர தருளால் அடையப்படுகின்றது. பரபுருஷனை விபசாரிஸ்திரீ நினைப்பதுபோல எப்போதும் குரவனைத் தியானித்தல்வேண்டும். (௪0)

---

** कुलस्त्री स्वपतिं यथा = குலஸ்திரீ தனது பதியினை நினைப்பதுபோல என்றும் பாடம்.

स्वाश्रमं च स्वजातिं च स्वकीर्तिं पुष्टिवर्धनम् ।
एतत्सर्वं परित्यज्य गुरुमेव समाश्रयेत् ॥ ४१ ॥

தனது (பிரஹ்மசாரியாதி) ஆசிரமம், தனது (பிராஹ்மணாதி) ஜாதி, தனது கீர்த்தி, *௧௭. வளம் என்னுமிவ்வெல்லாவற்றையும் செவ்வையாய் விட்டுக் குருவினையே செவ்வையாய் ஆசிரயிக்கவேண்டும். (௪௧)

अनन्याश्चितयंतो ये सुलभं परमं सुखम् ।
तस्मात्सर्वप्रयत्नेन गुरोराराधनं कुरु ॥ ४२ ॥

குருவினை *௧௮. அநந்நியமாய்ச் சிந்திப்பவர்க்குப் பரமாநந்தம் எளிதிற் பெறத்தக்கதாம். ஆதலால் எல்லா முயற்சியானும் குருவின் ஆராதனை செய்க. (௪௨)

गुरुवक्त्रे स्थिता विद्या गुरुभक्त्या च लभ्यते ।
त्रैलोक्ये स्फुटवक्तारो देवर्षिपितृमानवाः ॥ ४३ ॥

குருவின் வதனத்திலுள்ள வித்தை குருவினிடத்துச் செய்யும் பக்தியினாலடையப்படுகின்றது. மூன்றுலகத்தின்கண்ணுமுள்ள தேவரிஷி பிதுர்க்கள் மநுஷியரென்போர் இதனைத் தெளிவாய்க் கூறுவோராவர். (௪௩)

---

* ௧௭. தனதான்யாதி ஐசுவரியம்.

* ௧௮. அநந்நியம்=வேறில்லாதது.

गुकारश्चांधकारो हि रुकारस्तेज उच्यते ।
अज्ञानग्रासकं ब्रह्म गुरुरेव न संशयः ॥ ४४ ॥

குகாரம் அந்தகாரமாம். ருகாரம் (அதனை விழுங்கும்) தேஜ ஸெனப்படுகின்றது. அஞ்ஞானத்தை விழுங்கும் பிரஹ்மம் குருவே; சம்சய மில்லை. (சச)

** गुकारश्चांधकारस्तु रुकारस्तन्निरोधकृत् ।
† अंधकारविनाशित्वाद्गुरुरित्यभिधीयते ॥ ४५ ॥

குகாரம் இருளாம். ருகாரம் அதனைக் கெடுப்பதாம். அந்தகாரமாகிய இருளைக் கெடுப்பதா யிருத்தலால் குரு வெனப்படுகின்றது. (சரு)

गुकारश्च गुणातीतो रूपातीतो रुकारकः ।
गुणरूपविहीनत्वाद्गुरुरित्यभिधीयते ॥ ४६ ॥

குகாரம் * கக. குணாதீதமாம். * உ0. ரூபாதீதம்

---

** गुकारो भवरोगः स्यात् = குகாரம் பவரோகமாம் என்றும் பாடம்.

† भवरोगहरत्वाच्च = பவரோகத்தைக் கெடுக்குந்தன்மையால் என்றும் பாடம்.

* கக. குணாதீதம் = சத்துவாதிகுணங்களைக் கடந்தது.

* உ0. ரூபாதீதம் = வெண்மைமுதலிய உருவங்களைக் கடந்தது.

ருகாரமாம். குணரூபங்களில்லாததா யிருத்தலால் குரு வென்று கூறப்படுகின்றது. (சகூ)

गुकारः प्रथमो वर्णो मायादिगुणभासकः ।
रुकारोस्ति परं ब्रह्म मायाभ्रांतिविमोचकम् ॥ ४७ ॥

குகாரமாகிய முதலெழுத்து மாயாதிகுணங்களை விளக்குவதாம். ருகாரமென்னும் இரண்டாவதெழுத்து மாயாமயக்கத்தினைக் கெடுக்கும் பரப்பிரஹ்மமாம். (சஎ)

एवं गुरुपदं श्रेष्ठं देवानामपि दुर्लभम् ।
** हाहाहूहूगणैश्चैव गंधर्वाद्यैश्च पूजितम् ॥ ४८ ॥

இவ்விதத்தால் குருபதம் சிரேஷ்டமாம்; தேவர்களுக்கும் அடைதற்கரியதாம்; *உக. ஹாஹா ஹூஹூ வென்னும் கணங்களாகிய கந்தர்வர்முதலியோராலும் பூஜிக்கப்பட்டதாம். (சஅ)

---

** गरुडोरगगंधर्वसिद्धादिसुरपूजितम् = கருடன் (ஆதிசேஷன்) பாம்பு, கந்தர்வர், சித்தர்முதலிய தேவர்களால் பூஜிக்கப்பட்டதாம் என்றும் பாடம்.

* உக. ஹாஹா ஹூஹூ வென்பேர் சிவனுக்கிருபுறத்திலும் ஹாஹா ஹூஹூ வென்று கோஷித்துக்கொண்டிருக்கும் கந்தருவர்கள்.

ध्रुवं † तेषां च सर्वेषां नास्ति तत्त्वं गुरोः परम् ।
गुरोराराधनं कुर्यात् ‡ सजीवत्वं निवेदयेत् ॥ ४९ ॥

அவர்களெல்லோருக்கும் நிச்சயமாகக் குருவிற்கு மேலான * உஉ. தத்துவமில்லை. குருவின் ஆராதனஞ் செய்தல்வேண்டும். ஜீவத்தன்மையோடு (எல்லாவற்றையும்) நிவேதித்தல்வேண்டும். (சக)

आसनं शयनं वस्त्रं वाहनं भूषणादिकम् ।
साधकेन प्रदातव्यं गुरुसंतोषकारणम् ॥ ५० ॥

சாதகன் குருவின் சந்தோஷகாரணமான ஆசனம், படுக்கை, வஸ்திரம், வாகனம், பூஷணமுதலியவற்றைக் கொடுத்தல்வேண்டும். (டு0)

कर्मणा मनसा वाचा सर्वदाराधयेद्गुरुम् ।
दीर्घदंडं नमस्कृत्य निर्लज्जो गुरुसन्निधौ ॥ ५१ ॥

குருவின் சந்நிதியில் நாணமின்றியவனாய்த் *உங. தீர்க்கதண்டமாக நமஸ்கரித்துக் கர்ய(காய)த்தினாலும் மனதினு

---

† देवि ! मुमुक्षूणां = தேவி ! முமுக்ஷுக்களுக்கு என்றும் பாடம்.

‡ स्वजीवत्वं = தனது ஜீவத்தன்மையினை என்றும் பாடம்.

* உஉ. தத்துவம் = உண்மை.

* உங. தீர்க்க = நீண்ட.

லும் வாக்கினாலும் குருவை எப்போதும் ஆராதித்தல் வேண்டும். (௫௧)

शरीरमिन्द्रियं प्राणमर्थस्वजनबांधवान् ।
आत्मदारादिकं सर्वं सद्गुरुभ्यो निवेदयेत् ॥ ५२ ॥

சரீரத்தையும், இந்திரியத்தையும், பிராணனையும், பொருள் தம்மவர் பந்துக்கள் என்பவற்றையும், தன் தாரமுதலியவெல்லாவற்றையும் சற்குருவிற்கு நிவேதித்தல் வேண்டும். (௫௨)

गुरुरेको जगत्सर्वं ब्रह्मविष्णुशिवात्मकम् ।
गुरोः परतरं नास्ति तस्मात्संपूजयेद्गुरुम् ॥ ५३ ॥

பிரஹ்மவிஷ்ணுசிவவடிவமாகிய குரவன் ஒருவரே இச்சகமுழுவதும். குரவனைவிட மிக மேலான தத்துவமில்லை. ஆதலாற் குரவனைச் செவ்வையாய்ப் பூசித்தல்வேண்டும். (௫௩)

सर्वश्रुतिशिरोरत्नविराजितपदांबुजम् ।
वेदांतार्थप्रवक्तारं तस्मात्संपूजयेद्गुरुम् ॥ ५४ ॥

சகல வேதங்களின் சிரோரத்தினமாய் விளங்குகின்ற பாததாமரைகளை யுடையவராயும், வேதாந்தார்த்தங்களை யெடுத்து நன்றாய்ச் சொல்லுபவருமா யிருக்கின்ற குரவனைச் செவ்வையாய்ப் பூசித்தல் வேண்டும். (௫௪)

यस्य ‡ स्मरणमात्रेण ज्ञानमुत्पद्यते स्वयम् ।
स एव सर्वसंपत्तिः तस्मात्संपूजयेद्गुरुम् ॥ ५५ ॥

எவனை நினைத்தன்மாத்திரத்தால் ஞானம் தானே யுண்டாகுமோ, அவனே சகல சம்பத்துகளு மாவர். ஆதலாற் குருவனைச் செவ்வையாய்ப் பூசித்தல்வேண்டும். (ருரு)

* कृमिकोटिभिराविष्टं दुर्गंधमलमूत्रकम् ।
† श्लेष्मरक्तत्वचामांसैर्नद्धं चैतद्वरानने ॥ ५६ ॥

பார்வதி! இது(இவ்வுடல்) கிருமிகோடிகளால் சூழப் பட்டதும், துர்கந்தமுள்ள மலமூத்திரங்களுள்ளதும், சிலேட்டுமம் இரத்தம் தோல் மாம்ஸமுதலியவற்றாற் கட்டப்பட்டதுமாம். (இதில் அபிமானத்தை விட்டுக் குருவைச் சரணாகதி யடையவேண்டுமென்பது பொருள்.) (ருசா)

---

‡ श्रवणमात्रेण = கேட்டன் மாத்திரத்தால் என்றும் பாடம்.

* कृमिरक्तमलमूत्रादि दुर्गंधकुलदूषितम् = கிருமி ரக்தம் மலம் மூத்திரமுதலிய துர்கந்தசமூகங்களால் தூஷிக்கப்பட்டதாம் என்றும் பாடம்.

† अनित्यं दुःखनिलयं देहं विद्धि वरानने = பார்வதி! அநித்தியமும் துக்கவைப்புமாம் தேகம் என்று அறி. என்றும் பாடம்.

संसारवृक्षमारूढाः पतंति नरकार्णवे ।
यस्तानुद्धरते सर्वान्तस्मै श्रीगुरवे नमः ॥ ५७ ॥

சம்ஸாரவிருக்ஷத்தில் ஏறியவர்கள் நரகமாகிய சமுத்திரத்தில் விழுகின்றார்கள். அவர்களெல்லோரையும் எவர் கரையேற்றுகின்றனரோ, அத்தன்மைய ஸ்ரீகுருவிற்கு நமஸ்காரம். (ருஎ)

गुरुर्ब्रह्मा गुरुर्विष्णुर्गुरुर्देवो महेश्वरः ।
गुरुरेव परं ब्रह्म तस्मै श्री.... ॥ ५८ ॥

குரவனே பிரஹ்மா; குரவனே விஷ்ணு; குரவனே மஹேசுவரனாகிய தேவனும்; குரவனே ஏகமாகிய பரப்பிரஹ்மமாம். (ஆதலால்) அத்தன்மைய ஸ்ரீகுருவிற்கு நமஸ்காரம். (ருஅ)

अज्ञानतिमिरांधस्य ज्ञानांजनशलाकया ।
चक्षुरुन्मीलितं येन तस्मै श्री.... ॥ ५९ ॥

அஞ்ஞானமென்னும் திமிரத்தால் குருடாயுள்ளவனது கண், ஞானமென்னும் *உசு. அஞ்சனசலாகையினால் எவரால் திறக்கப்பட்டதோ, அத்தன்மைய ஸ்ரீ குருவிற்கு நமஸ்காரம். (ருகூ)

* உசு கண்ணிற்கிடும் மையோடுகூடிய குச்சியினால்.

अखंडमंडलाकारं व्याप्तं येन चराचरम् ।
तत्पदं दर्शितं येन तस्मै श्री.... ॥ ६० ॥

அகண்டமண்டலாகாரமான சராசரம் எதனால் வியாபிக்கப்பட்டிருக்கின்றதோ, அந்தத் * உரு. தத்பதம் எவரால் காட்டப்பட்டதோ, அத்தன்மைய ஸ்ரீ குருவிற்கு நமஸ்காரம். (௬0)

स्थावरं जंगमं व्याप्तं यत्किंचित्सचराचरम् ।
त्वंपदं दर्शितं येन तस्मै श्री.... ॥ ६१ ॥

ஸ்தாவரஜங்கமமான இச்சராசரம் எதனால் வியாபிக்கப்பட்டிருக்கின்றதோ, அந்தத் * உசு. துவம்பதம் எவரால் காட்டப்பட்டதோ, அத்தன்மைய ஸ்ரீ குருவிற்கு நமஸ்காரம். (௬௧)

चिन्मयव्यापितं सर्वं त्रैलोक्यं सचराचरम् ।
असित्वं दर्शितं येन तस्मै श्री.... ॥ ६२ ॥

சராசரத்தோடுகூடிய மூன்றுலகமும் யாவும் சின்

* உரு. தத்துவமஸிமகாவாக்கியத்துள்ள தத் என்னும் சொல். தத் = அது.

* உசு. தத்துவமஸிமகாவாக்கியத்துள்ள துவம் என்னும் சொல். துவம் = நீ.

டயத்திஞல் வியாபிக்கப்பட்டிருக்கின்றது. * உஎ. அஸித்துவம் எவராற் காட்டப்பட்டதோ, அத்தன்மைய ஸ்ரீ குருவிற்கு நமஸ்காரம். (சூஉ)

निमिषान्निमिषार्द्धाद्वा यद्वाक्याद्वै विमुच्यते ।
स्वात्मानं शिवमालोक्य तस्मै श्री.... ॥ ६३ ॥

எவரது வாக்கியத்திஞல் நிமிஷத்தால் அல்லது நிமிஷத்தினது பாதியால் தனது ஆத்மாவாகிய சிவத்தினை யறிந்து (புருஷன்) விமுக்தனுவனே, அத்தன்மைய ஸ்ரீ குருவிற்கு நமஸ்காரம். (சூங)

चैतन्यं शाश्वतं शांतं व्योमातीतं निरंजनम् ।
† नादबिंदुकलातीतं तस्मै श्री.... ॥ ६४ ॥

சைதந்நியமும், சாசுவதமும், சாந்தமும், ஆகாயத்திற்கப்பாற்பட்டதும், நிரஞ்சனமும், * உஅ. நாதபிந்துகலைகளுக்கப்பாற்பட்டதுமான அந்த ஸ்ரீகுருவிற்கு நமஸ்காரம்.

---

* உஎ தத்துவமஸிமகாவாக்கியத்துள்ள கடைசிச்சொல் அஸி; அதன்றன்மை அஸித்துவம். அஸி = இருக்கிறாய்.

† निर्मलं दर्शितं येन = நிர்மலமுமான வஸ்து எவரால் காட்டப்பட்டதோ, என்றும் பாடம்.

* உஅ. நாதமாவது வெண்கலமணியடித்தபின் கலீரென்றுண்டாகும் பொதுச்சத்தம்போன்ற தொடர்ச்சியாகிய சத்தம். பிந்துவாவது அநுஸ்வாரத்தி( —ம் என்பத)ற்குப் பின் உண்டாகும் துவனி. கலையாவது நாதத்தின் ஏகதேசம்.

निर्गुणं निर्मलं शांतं जंगमं स्थिरमेव च ।
व्याप्तं येन जगत्सर्वं तस्मै श्री.... ॥ ६५ ॥

எதனால் (எந்தப்பிரஹ்மத்தினால்) ஸ்தாவரஜங்கமமான ஜகத்து யாவும் வியாபிக்கப்பட்டிருக்கின்றனவோ, அது நிர்க்குணமும் நிர்மலமும் சாந்தமுமான பிரஹ்மமாம். அப்படிப்பட்ட பிரஹ்மவடிவ ஸ்ரீ குருவிற்கு நமஸ்காரம். (௬௫)

स पिता स च मे माता स बंधुः स च देवता ।
संसारमोहनाशाय तस्मै श्री.... ॥ ६६ ॥

பிதா அவர்; என் மாதா அவர்; பந்து அவர்; தெய்வமும் அவரே. சம்சாரமோகத்தினைக் கெடுக்கும் அத்தன்மைய ஸ்ரீ குருவுக்கு நமஸ்காரம். (௬௬)

यत्सत्त्वेन जगत्सत्यं यत्प्रकाशेन भात्येतत् ।
यदानंदेन नंदंति तस्मै श्री.... ॥ ६७ ॥

எதன் இருப்பினால் ஜகத்து உளதாகின்றதோ, எதன் விளக்கத்தால் இது விளங்குகின்றதோ, எதன் ஆநந்தத்தால் எல்லாம் ஆநந்திக்கின்றனவோ, அத்தன்மைய ஸ்ரீ குருவிற்கு நமஸ்காரம். (௬௭)

यस्मिन् स्थितमिदं सर्वं भाति यद्भानरूपतः ।
यत्प्रीत्या प्रियं पुत्रादि तस्मै.... ॥ ६८ ॥

எதன்கண் இவ்வெல்லாம் நிலைத்திருக்கின்றனவோ, எதன் விளக்கவடிவத்தால் இவ்வெல்லாம் விளங்குகின்றனவோ, எதன் பிரியத்தால் புத்திரன் முதலியோர் பிரியமாயிருக்கின்றனரோ, அத்தன்மைய ஸ்ரீ குருவிற்கு நமஸ்காரம் (௬௮)

येनेदं दर्शितं तत्त्वं चित्तचैत्यादिकं तथा ।
जाग्रत्स्वप्नसुषुप्त्यादि तस्मै श्री.... ॥ ६९ ॥

எவரால் இந்தச்சித்தமும் சங்கற்பிக்கப்படுவதுமுதலியதுமான தத்துவமும், அவ்வாறே ஜாக்கிரம் சொப்பனம் சுழுத்தி முதலியனவும் காட்டப்பட்டதோ, அத்தன்மைய ஸ்ரீ குருவிற்கு நமஸ்காரம். (௬௯)

यस्य ज्ञानमिदं विश्वं न दृश्यं भिन्नभेदतः ।
सदैकरूपरूपाय तस्मै श्री.... ॥ ७० ॥

எதன் ஞானம் இவ்வெல்லாமுமாமோ, வேறுபட்ட பேதத்தால் (பேதம் நீங்கியதனால்) திருசியமன்றோ, அந்த என்றும் ஏகரூபவடிவாகிய ஸ்ரீ குருவிற்கு நமஸ்காரம். (௭0)

* यस्य ज्ञातं मतं तस्य मतं यस्य न वेद सः ।
अनन्यभावभावाय तस्मै श्री.... ॥ ७१ ॥

எவனுக்கு அறியப்பட்டது அவனுக்கு இஷ்டமுள்ளதாமோ, எவனுக்கு இஷ்டமானதை அவன் அறிகிறதில்லையோ, அத்தன்மைய அந்நிய இருப்பு இல்லாதிருக்கும் ஸ்ரீ குருவிற்கு நமஸ்காரம். (௭௧)

यस्मै कारणरूपाय कार्यरूपेण भाति यत् ।
कार्यकारणरूपाय तस्मै श्री.... ॥ ७२ ॥

எக்காரணரூபமா யிருப்பதற்கு யாது காரியவடிவமாய் விளங்குகின்றதோ, அத்தன்மைய காரியகாரணவடிவமான ஸ்ரீ குருவிற்கு நமஸ்காரம். (௭௨)

नानारूपमिदं विश्वं न केनाप्यस्ति भिन्नता ।
कार्यकारणरूपाय तस्मै श्री.... ॥ ७३ ॥

---

* "यदज्ञानान्मतं भूयान्न मतं यस्य वेदनात् ।
तद्ब्रह्म दर्शितं येन तस्मै श्रीगुरवे नमः ॥ எதனையறியாததினால் (அது) மனதினால் நினைக்கப்படுவதாகுமோ, எதனையறிதலால் (அது) நினைக்கப்படுவதாகாதோ, அப்படிப்பட்ட பிரஹ்மம் எவரால் காட்டப்பட்டதோ அந்த ஸ்ரீ குருவிற்கு நமஸ்காரம்" என்றும் பாடமுளது.

நாநாவடிவமான இவ்வுலகு எதைவிட எவ்விதத்தாலும் வேறுகாதோ, அத்தன்மைய காரியகாரணவடிவமான ஸ்ரீ குருவிற்கு நமஸ்காரம். (எ௩)

ज्ञानशक्तिसमारूढतत्त्वमालाविभूषिणे ।
भुक्तिमुक्तिप्रदाते च तस्मै श्री.... ॥ ७४ ॥

ஞானசக்திசமாரூட (சிற்சக்தியோடு செவ்வையாய்ப் பொருந்தியவ)ராய்த் தத்துவமாலையினால் அலங்கரிக்கப்பட்டவரும், தம்மை யடைந்தவருக்குப் புத்திமுத்திகளைத் தருபவருமாகிய அந்த ஸ்ரீ குருவிற்கு நமஸ்காரம். (எச)

अनेकजन्मसंप्राप्तकर्मबंधविदाहिने ।
ज्ञानानलप्रभावेन तस्मै श्री.... ॥ ७५ ॥

ஞானாக்கினியின் பிரபாவத்தால் (சிஷ்யர்களின்) அநேக ஜன்மங்களி லடையப்பட்ட கர்மபந்தங்களைத் தகிப்பவராகிய அந்த ஸ்ரீ குருவிற்கு நமஸ்காரம். (எரு)

शोषणं भवसिंधोश्च दीपनं क्षरसंपदाम् ।
गुरोः पादोदकं यस्य तस्मै श्री.... ॥ ७६ ॥

பவசமுத்திரத்தை வற்றச்செய்வதும், க்ஷரமான சம்பத்தைக் கெடுப்பதும் எவரது பாதத்தின் உதகமாமோ, அத்தன்மைய ஸ்ரீ குருவிற்கு நமஸ்காரம். (எசு)

न गुरोरधिकं तत्त्वं न गुरोरधिकं तपः ।
न गुरोरधिकं ज्ञानं तस्मै श्री.... ॥ ७७ ॥

குரவனினும் மேலான தத்துவ மில்லை. குரவனினும் மேலான தவ மில்லை. குரவனைவிட மேலான ஞான மில்லை. (ஆதலால்) அத்தன்மைய ஸ்ரீ குருவிற்கு நமஸ்காரம். (எஎ)

मन्नाथः श्रीजगन्नाथो मद्गुरुः श्रीजगद्गुरुः ।
ममात्मा सर्वभूतात्मा तस्मै श्री.... ॥ ७८ ॥

எனது நாதன் ஸ்ரீ ஜகந்நாதனும். எனது குரு ஸ்ரீ ஜகத்குருவாம். எனது ஆத்மாவே சகல பூதங்களின் ஆத்மாவாம். (ஆதலால்) அத்தன்மைய ஸ்ரீ குருவிற்கு நமஸ்காரம். (எஅ)

गुरुरादिरनादिश्च गुरुः परमदैवतम् ।
गुरुमंत्रसमो नास्ति तस्मै श्री.... ॥ ७९ ॥

குரு ஆதியும் அநாதியு மாவர். குரு மேலான தெய்வ மாவர். குருமந்திரத்திற்குச் சமானமான தில்லை. (ஆதலால்) அந்த ஸ்ரீ குருவிற்கு நமஸ்காரம். (எகூ)

एक एव परो बंधुर्विषमे समुपस्थिते ।
गुरुः सकलधर्मात्मा तस्मै श्री.... ॥ ८० ॥

ஆபத்து நேர்ந்தகாலத்துச் சகல தர்மவடிவமான குரு ஒருவரே மேலான பந்துவாவர். (ஆதலால்) அத்தன்மைய ஸ்ரீ குருவிற்கு நமஸ்காரம். (அ௦)

गुरुमध्ये स्थितं विश्वं विश्वमध्ये स्थितो गुरुः ।
गुरुर्विश्वं न चान्योस्ति तस्मै श्री.... ॥ ८१ ॥

குருவின் நடுவில் விசுவ மிருக்கின்றது. விசுவநடுவில் குரு விருக்கின்றார். குருவே சகல சகத்து மாவர்; வேறில்லை. (ஆதலால்) அத்தன்மைய ஸ்ரீ குருவிற்கு நமஸ்காரம். (அக)

भवारण्यप्रविष्टस्य दिङ्मोहभ्रांतचेतसः ।
येन संदर्शितः पंथाः तस्मै श्री.... ॥ ८२ ॥

பவ மென்னுங் காட்டிற் புகுந்து, திசைமயக்க மென்னும் * உகூ. மோகத்தை யடைந்த சித்தமுள்ளவனுக்கு எவரால் வழி காட்டப்பட்டதோ, அத்தன்மைய ஸ்ரீ குருவிற்கு நமஸ்காரம். (அ௨)

तापत्रयाग्नितप्तानामशांतप्राणिनां भुवि ।
† गुरुरेव परा गंगा तस्मै श्री.... ॥ ८३ ॥

---

* உகூ அறிவிழப்பை.

† यस्य पादोदकं गंगा = எவருடைய பாதோதகம் கங்கையாகுமோ என்றும் பாடம்.

புவியில் * ௩௦. தாபத்திரய மென்னும் அக்கினியாற் றகிக்கப்பட்ட சாந்தமின்றிய பிராணிகளுக்கு குருவே மேலான கங்கையாவர். (ஆதலால்) அத்தன்மைய ஸ்ரீ குருவிற்கு நமஸ்காரம். (அ௩)

* अज्ञानेनाहिना ग्रस्ताः प्राणिनस्तान् चिकित्सकः ।
विद्यास्वरूपो भगवान् तस्मै श्री.... ॥ ८४ ॥

அஞ்ஞான மென்னும் பாம்பினால் விழுங்கப்பட்டவர்கள் பிராணிகள். அவர்களைச் சிகிச்சைசெய்பவர் வித்தியா சொரூபராகிய பகவானவர். (ஆதலால்) அத்தன்மைய ஸ்ரீ குருவிற்கு நமஸ்காரம். (அச)

---

* ௩௦. தாபம் மூன்று. அவை அத்தியாத்மம், அதிதெய்வம், அதிபூதம் என்பன. இவற்றின் இலக்கணம் விவேகசிந்தாமணி (வேதாந்தபரிச்சேதம்), ஸ்ரீ விசாரசந்திரோதய முதலியவற்றில் காண்க.

* अज्ञानसर्पदष्टानां प्राणिनां कश्चिकित्सकः ।
सम्यग्ज्ञानमहामंत्रवेदिनं सद्गुरुं विना ॥ அஞ்ஞானமாகிய பாம்பினாற் கடிக்கப்பட்ட பிராணிகட்கு நன்ஞானமாகிய மகாமந்திர முணர்ந்த சற்குருவை யன்றிச் சிகிச்சை செய்பவன் எவனுளன்? (இல்லையென்றபடி) (அச) என்றும் பாடம்.

हेतवे जगतामेव संसारार्णवसेतवे ।
प्रभवे सर्वविद्यानां शंभवे गुरवे नमः ॥ ८५ ॥

ஜகத்திற்கு ஏதுவாகியும், சம்சாரசமுத்திரத்திற்குச் சேதுவா (அணையா)கியும், சகல வித்தைகளுக்கும் பிறப்பிடமாயுமுள்ள சம்புவாகிய குருவிற்கு நமஸ்காரம். (அரு)

ध्यानमूलं गुरोर्मूर्त्तिः पूजामूलं गुरोः पदम् ।
मंत्रमूलं गुरोर्वाक्यं मुक्तिमूलं गुरोः कृपा ॥ ८६ ॥

தியானத்திற்கு மூலம் குருவடிவம். பூஜைக்கு மூலம் குருவின் திருவடிகள். மந்திரத்திற்கு மூலம் குருவின் வாக்கியம். முக்திக்கு மூலம் குருவின் கிருபை. (அசு)

सप्तसागरपर्यंतं तीर्थस्नानफलं तु यत् ।
गुरुपादोदकबिंदोः सहस्रांशेन तत्फलम् ॥ ८७ ॥

சப்தசாகரபரியந்தமுள்ள தீர்த்தங்களின் ஸ்நானத்தா லுண்டாகும் பயன் யாதோ, அது குருவினது * பாதோதகத்துளியின் ஆயிரத்தொரு கூற்றினால் உண்டாகின்றது. (அஎ)

---

* பாதோதகம் = காலலம்பிய நீர்.

शिवे रुष्टे गुरुस्त्राता गुरौ रुष्टे न कश्चन ।
लब्ध्वा कुलगुरुं सम्यग्गुरुमेव समाश्रयेत् ॥ ८८ ॥

சிவன் கோபித்தகாலத்துக் குரு இரக்ஷிப்பவ ராகின்றார். குரவன் கோபித்தகாலத்து இரக்ஷிப்பவ ரொருவரு மில்லை. ஆதலாற் குலகுருவை யடைந்து, அக்குரவனையே செவ்வை யாக ஆசிரயிக்கவேண்டும். (௮௮)

मधुलुब्धो यथा भृंगः पुष्पात्पुष्पांतरं व्रजेत् ।
ज्ञानलुब्धस्तथा शिष्यो गुरोर्गुर्वंतरं व्रजेत् ॥ ८९ ॥

தேன்விருப்பமுள்ள வண்டானது எப்படிப் புஷ்பத்தி னின்றும் வேறு புஷ்பத்தை யடைகின்றதோ, அப்படியே ஞான விருப்புடைய சிஷ்யன் ஓர் குருவினின்றும் (முற்றுப் பெறாவிடின்) மற்றோர் குருவை அடையவேண்டும். (௮௯)

वन्दे गुरुपदद्वंद्वं वाङ्मनोतीतगोचरम् ।
श्वेतरक्तप्रभाभिन्नं शिवशक्त्यात्मकं परम् ॥ ९० ॥

வாக்குமனதுகளுக் கதீதகோசரமாயும், வெண்மை செம்மைப்பிரபைகளுக்கு அபின்னமாயும், சிவசக்திசொரூபமாயும், மேலானதாயுமுள்ள குருவின் திருவடிகளிரண்டினையும் நமஸ்கரிக்கின்றேன். (௯0)

गुकारं च गुणातीतं रुकारं रूपवर्जितम् ।
गुणातीतमरूपं च यो दद्यात्स गुरुः स्मृतः ॥ ९१ ॥

குகாரம் குணாதீதமும், ருகாரம் ரூபநீங்கியதுமாம். குணாதீதத்தினையும் அருவத்தினையும் எவர் தருகின்றாரோ, அவர் குருவெனப்படுகின்றார். (௯௧)

अत्रिनेत्रः शिवः साक्षात् द्विबाहुश्च हरिस्स्मृतः ।
योऽचतुर्वदनो ब्रह्मा श्रीगुरुः कथितः प्रिये ॥ ९२ ॥

பிரியமுள்ள பார்வதி! எவர் மூன்று நேத்திரமின்றிய சாக்ஷாத் சிவமாயும், இரண்டு புஜங்களுடைய விஷ்ணுவாயும், நான்கு முகங்களின்றிய பிரஹ்மாவாயும் இருக்கின்றனரோ, அவரே ஸ்ரீ குருவெனப்படுகின்றார். (௯௨)

अयं मयांजलिर्बद्धो दयासागरासिद्धये ।
यदनुग्रहतो जंतुश्चित्रसंसारमुक्तिभाक् ॥ ९३ ॥

எவருடைய அநுக்கிரகத்தால் ஜீவர்கள் விசித்திரமான சம்சாரத்தினின்றும் மோக்ஷத்தை அடைகின்றார்களோ, அவரது கிருபைக்கடற் சித்தித்தற்பொருட்டு என்னால் இவ்வஞ்சலி செய்யப்படுகின்றது. (௯௩)

श्रीगुरोः परमं रूपं विवेकचक्षुरग्रतः ।
मंदभाग्या न पश्यंति अंधाः सूर्योदयं यथा ॥ ९४ ॥

ஸ்ரீ குருவின் மேலான வடிவத்தினை விவேகக்கண்ணுடையோர் நேரிற் காண்பர். மந்தபாக்கியமுடையவர்கள் குருடர் சூரியோதயத்தைக் காணாததுபோற் காணார். (௯௪)

कुलानां कुलकोटीनां तारकस्तत्र तत्क्षणात् ।
अतस्तं सद्गुरुं ज्ञात्वा त्रिकालमभिवादयेत् ॥ ९५ ॥

குலங்களுக்கும் குலகோடிகளுக்கும் ஆங்கு அந்தக்ஷணமே தாரகமாயிருக்கின்றார். ஆதலால் அச்சற்குருவை அறிந்து மூன்றுகாலமும் வந்திக்க (வணங்க) வேண்டும். (௯௫)

श्रीनाथचरणद्वंद्वं यस्यां दिशि विराजते ।
तस्यां दिशि नमस्कुर्याद्भक्त्या प्रतिदिनं प्रिये ॥ ९६ ॥

ஸ்ரீ நாதராகிய குருவின் சரணங்களிரண்டும் எத்திக்கில் விளங்குகின்றனவோ, அத்திக்கில் பிரியையே! நாடோறும் அன்போடு நமஸ்கரித்தல்வேண்டும். (௯௬)

साष्टांगप्रणिपातेन स्तुवन्नित्यं गुरुं भजेत् ।
भजनात्स्थैर्यमाप्नोति स्वस्वरूपमयो भवेत् ॥ ९७ ॥

சாஷ்டாங்க நமஸ்காரத்தால் குருவைத் தினமும் துதித்துப் பஜிக்கவேண்டும். பஜித்தலால் ஸ்திரத்தன்மை யையடைகின்றான்; சுவஸ்வரூபமயனாகின்றான். (௯௭)

दोर्भ्यां पद्भ्यां च जानुभ्यामुरसा शिरसा दृशा ।
मनसा वचसा चेति प्रणामोष्टांग उच्यते ॥ ९८ ॥

புஜங்களாலும், பதங்களாலும், முழந்தாட்களாலும், மார்பினாலும், சிரத்தாலும், கண்ணாலும், மனதாலும், வாக்காலும் வணங்குதல் அஷ்டாங்க மெனப்படும். (௯௮)

तस्यै दिशे सततमंजलिरेष नित्यं
प्रक्षिप्यतां मुखरितैर्मधुरैः प्रसूनैः ।
जागर्ति यत्र भगवान् गुरुचक्रवर्ती
विश्वस्थितिप्रलयनाटकनित्यसाक्षी ॥ ९९ ॥

எங்கே பகவான் குருசக்கரவர்த்தியானவர் விசுவத்தின் ஸ்திதிப்பிரளய நாடகத்திற்கு நித்தியசாக்ஷியாய் ஜாக்கிரமுள்ளவரா யிருக்கின்றனரோ, அத்திசையை நோக்கி மலர்ந்த மதுரமான புஷ்பங்களால் * ௩௨. நித்தியமும் இடையின்றி இவ்வஞ்சலி செய்யப்படுக. (௯௯)

अभ्यस्तैः किमुदीर्घकालविमलैर्व्याधिप्रदैर्दुष्करैः ।
प्राणायामशतैरनेककरणैर्दुःखात्मकैर्दुर्जयैः ॥

* ௩௨. அஞ்சலிசெய்தல் = கைகூப்புதல

यस्मिन्नभ्युदिते विनश्यति बलीवायुः स्वयं तत्क्षणात् ।
प्राप्तुं तत्सहजस्वभावमनिशं सेवेत चैकं गुरुम् ॥ १०० ॥

* டூடூ. துஷ்கரமும், வியாதியைத்தருவனவும், நெடுங் காலம் மலம் நீங்கியனவும், அப்பியசிக்கப்பட்டனவும், துக்கசொரூபமும், ஜயித்தற்கரியனவுமாகிய நூற்றுக்கணக் கான பிராணாயாமங்களாலும், அநேக காரணங்களாலும் யாது பயன்? எது உதயமாயின் வலியுள்ள வாயு தானே நசிக்குமோ, அதனை அக்கணத்திலேயே அடைய, சகஜசு பாவமுள்ள ஏகமாகிய குருவை அநுதினமும் சேவிக்க வேண்டும். (௧00)

ज्ञानं विना मुक्तिपदं लभ्यते गुरुभक्तितः ।
गुरोः * समानतो नान्यत् साधनं गुरुमार्गिणाम् ॥ १०१ ॥

ஞானமின்றி முத்திபதம் குருபக்தியினு லடையப்படு கின்றது. குருமார்க்க முடையோருக்குக் குரவனுக்குச் சமானமான சாதனம் வேறில்லை. (௧0௧)

यस्मात्परतरं नास्ति नेति नेतीति वै श्रुतिः ।
मनसा वचसा चैव सत्यमाराधयेद्गुरुम् ॥ १०२ ॥

---

* டூடூ. செய்தற்கரியது.

* प्रसादतः பிரசாதத்தினும் என்றும் பாடம்.

வேதமானது இப்படியன்று இப்படியன்று என்னும் வாக்கியத்தால் எதனின் மேலான தில்லையெனக் கூறுகின்றதோ, அத்தன்மைய சத்தியமான குருவை மனதினாலும் வாக்கினாலும் ஆராதித்தல் வேண்டும். (௧0௨)

गुरोः कृपाप्रसादेन ब्रह्मविष्णुशिवादयः ।
सामर्थ्यमभजन्सर्वे सृष्टिस्थित्यन्तकर्मणि ॥ १०३ ॥

குருவின் கிருபையாகிய பிரசாதத்தால் பிரஹ்மா விஷ்ணு சிவன்முதலியோர் யாவரும் சிருஷ்டி ஸ்திதி சங்காரத் தொழில்களில் சாமர்த்தியத்தைப் பெற்றார்கள்.()

देवकिन्नरगन्धर्वाः पितृयक्षास्तुतुंबुरुः ।
मुनयोपि न जानंति गुरुशुश्रूषणे विधिम् ॥ १०४ ॥

தேவகின்னரகந்தருவர்களும், பிதுரர் யக்ஷர் தும்புருவர் முனிவர்களும் குருபணிவிடையில் விதியினை அறியார். (௧0௪)

तार्किकाश्छान्दसाश्चैव दैवज्ञाः कर्मठाः प्रिये ।
लौकिकास्ते न जानन्ति गुरुतत्त्वं निराकुलम् ॥ १०५ ॥

பிரியமானவளே! தார்க்கிகரும், வேதமுணர்ந்தோரும், சோதிடத்தை யறிந்தோரும், கர்மங்களைச் செய்வோ

ரும், இலௌகிகரும் சிதைவின்றிய குருதத்துவத்தை யறியார்கள். (௧0௫)

महाहंकारगर्वेण तपोविद्याबलेन च ।
भ्रमंत्येतस्मिन्संसारे घटीयंत्रं यथा पुनः ॥ १०६ ॥

பெருமகங்காரமாகிய கர்வத்தினாலும், தவம் வித்தையென்பவற்றின் வலியாலும், *௩௪. கடியந்திரத்தைப் போல மீண்டும் இச்சம்சாரத்தில் கீழ்மேலாய்ச் சுழல்வர். ()

यज्ञिनोपि न मुक्ताः स्युः न मुक्ता योगिनस्तथा ।
तापसा अपि नो मुक्ता गुरुतत्त्वात्पराङ्मुखाः ॥ १०७ ॥

குருதத்வபராமுக மானவர்கள் யஞ்ஞத்தைச் செய்பவராயினும் முக்தராகார். அப்படியே யோகாப்பியாசஞ் செய்பவராயினும் முக்தராகார். தபத்தைச் செய்பவராயினும் முக்தராகார். (௧0எ)

न मुक्तास्तु गंधर्वाः पितृयक्षास्तु चारणाः ।
ऋषयः सिद्धदेवाद्याः गुरुसेवापराङ्मुखाः ॥ १०८ ॥

---

* ௩௪. துலையந்திரம். இஃது ஒரு வடக்கயிற்றில் ஒருமுகமாகப் பலகலயங்கள் கட்டப்பட்டுக் கீழ்மேலாகச் சுற்றி வரும் ஒருவகை ஏற்றம். இதனை கடியந்த்ர மென்பர் வடநூலார்,

குருசேவையிற் பராமுகர்களாகிய இருஷிகள் கந்தர்வர் பிதுர்க்கள் யக்ஷர் சாரணர் சித்தர் தேவர் முதலியோர் முக்தராகார். (௧0௮)

॥ इति श्रीस्कान्दोत्तरखण्डे उमामहेश्वरसंवादे

श्रीगुरुगीतायां प्रथमोध्यायः ॥

ஸ்ரீ குருகீதை முதல் அத்தியாயம்.

முற்றிற்று.



# ஸ்ரீ குருகீதை.

## ॥ अथ द्वितीयोऽध्यायः ॥

## இரண்டாம் அத்தியாயம்.

ध्यानं शृणु महादेवि सर्वानंदप्रदायकम् ।
सर्वसौख्यकरं चैव भुक्तिमुक्तिप्रदायकम् ॥ १०९ ॥

மகாதேவி! சகலாநந்தத்தைத் தருவதும், சகல சௌக்கியத்தைத் தருவதும், போகமோக்ஷங்களைக் கொடுப்பதுமாகிய குருவின் தியானத்தைக் கேட்பாயாக. (௧0௯)

श्रीमत्परं ब्रह्म गुरुं स्मरामि श्रीमत्परं ब्रह्म गुरुं भजामि ।
श्रीमत्परं ब्रह्म गुरुं वदामि श्रीमत्परं ब्रह्म गुरुं नमामि ॥ ११० ॥

திருவுடைய (ஞானைசுவரியமுடைய) பரப்பிரஹ்மமாகிய குரவனை ஸ்மரிக்கின்றேன். திருவுடைய பரப்பிரஹ்மமாகிய குரவனைப் பஜிக்கின்றேன். திருவுடைய பரப்பிரஹ்மமாகிய குரவனைத் துதிக்கின்றேன். திருவுடைய பரப்பிரஹ்மமாகிய குரவனை வணங்குகின்றேன். (௧௧0)

ब्रह्मानंदं परमसुखदं केवलं ज्ञानमूर्तिम् ।
द्वंद्वातीतं गगनसदृशं तत्त्वमस्यादिलक्ष्यम् ॥

एकं नित्यं विमलमचलं सर्वधीसाक्षिभूतम् ।
भावातीतं त्रिगुणरहितं सद्गुरुं तन्नमामि ॥ १११ ॥

பிரஹ்மாநந்தமும், பரமசுகத்தைத் தருவதும் * நடு. கேவலமும், ஞானவடிவினதும், துவந்துவாதீதமும், ஆகாயத்தைப்போன்றதும், தத்துவமஸி முதலியவற்றின் இலக்ஷியமும், ஏகமும், நித்தியமும், விமலமும், அசலமும், சகல புத்திகளின் சாக்ஷிவடிவமும், * நசு. பாவாதீதமும், முக்குணங்களின்றியதும், சற்குருவுமாகிய அவரை நமஸ்கரிக்கின்றேன். (ககக)

हृदंबुजे कर्णिकमध्यसंस्थे सिंहासने संस्थितदिव्यमूर्त्तिम् ।
ध्यायेद्गुरुं चंद्रकलाप्रकाशं सच्चित्सुखाभीष्टवरं दधानम् ॥ ११२ ॥

இதயதாமரையில் * நஎ. கர்ணிகைநடுவிலிருக்கும் சிம்ஹாசனத்தின்கண் வீற்றிருக்கும் திவ்வியவடிவினரும், சந்திரகலாப்பிரகாசரும், சச்சிதாநந்தவடிவினரும், விரும்பிய * நஅ. வரத்தைத் தரித்தவருமாகிய குருவைத் தியானித்தல்வேண்டும். (ககஉ)

---

* நடு. கேவலம் = தனிமையானது; ஒப்பற்றது.

* நசு. பாவனைக்கெட்டாததும்.

* நஎ. கர்ணிகை = தாமரைமலரின் நடுவிலிருக்கும் காய். இதனைப் பொகுட்டென்பர்

* நஅ. வரம் = விரும்பியது கொடுத்தல்,

श्वेतांबरं श्वेतविलेपपुष्पं मुक्ताविभूषं मुदितं द्विनेत्रम् ।
वामांकपीठस्थितदिव्यशक्तिं मन्दस्मितं पूर्णकृपानिधानम् ॥११३॥

வெண்மைவஸ்திரந் தரித்தவரும், வெண்மைச்சந்தனமும் புஷ்பமு மணிந்தவரும், முத்துமாலைகளா லலங்கரிக்கப்பட்டவரும், களிப்புடையவரும், இரண்டு நேத்திரங்களுள்ளவரும், இடப்பாகப்பீடத்துள்ள திவ்வியசக்தியினரும், புன்சிரிப்புடையவரும், பூர்ண * ௩௧. கிருபாநிதானரும். ()

आनंदमानंदकरं प्रसन्नं ज्ञानस्वरूपं निजभावयुक्तम् ।
† योगीन्द्रमीड्यं भवरोगवैद्यं श्रीमद्गुरुं नित्यमहं नमामि ॥११४॥

ஆநந்தசொரூபரும், ஆநந்தத்தைச் செய்பவரும், * ௩௦. பிரசன்னரும், ஞானசொரூபரும், தனது தன்மையோடு கூடியவரும், யோகீந்திரரும், துதிக்கப்படுபவரும், * ௩௪. பவரோகவைத்தியருமாகிய ஸ்ரீமானாகிய குருவை நித்தியம் யான் நமஸ்கரிக்கின்றேன். (௧௧௪)

---

* ௩௧. கிருபைக்கிடமானவரும்.

†. योगीन्द्रवन्द्यं = யோகீந்திரர்களால் வணங்கப்படுபவரும் என்னும் பாடம்.

* ௩௦. சந்தோஷமுடையவரும்.

* ௩௪. பவரோகம் = பிறவிப்பிணி.

वन्दे गुरूणां चरणारविन्दं संदर्शितस्वात्मसुखांबुधीनाम् ।
जनस्य येषां गुलिकायमानं संसारहालाहलमोहशांत्यै ॥ ११५ ॥

ஜனங்களின் சம்சார மென்னும் * சஉ. ஆலாஹலமாகிய மோகம் கெடுதற்பொருட்டுக் குளிகையாக்கப்பட்டுள்ள சுவாத்மாநந்தசமுத்திரத்தினைச் செவ்வையாய்க் காட்டிய குரவரது திருவடித்தாமரைகளை வணங்குகின்றேன். (கக௫)

यस्मिन् सृष्टिस्थितिध्वंसनिग्रहानुग्रहात्मकम् ।
कृत्यं पंचविधं शश्वद्भासते तं गुरुं भजेत् ॥ ११६ ॥

எவரிடத்துச் சிருஷ்டி ஸ்திதி சங்காரம் நிக்கிரகம் (திரோபவம்) அநுக்கிரக மென்னும் வடிவினதாகிய ஐவகைக்கிருத்தியமும் அடிக்கடி தோன்றுகின்றதோ, அந்தக் குருவை நமஸ்கரிக்கின்றேன். (கக௬)

पादाब्जे सर्वसंसारदावकालानलं स्वके ।
ब्रह्मरन्ध्रे स्थितांभोजमध्यस्थं चंद्रमण्डलम् ॥ ११७ ॥

தனது பாததாமரையில் சகல சம்சாரங்களாகிய காட்டை யெரிக்கும் காலாக்கினியுடையவரும், பிரஹ்மரந்திரத்தின்கண்ணுள்ள தாமரைநடுவிலிருக்கும் சந்திரமண்டலத்தை யுடையவரும், (கக௭)

* சஉ. விஷம்.

अकथादित्रिरेखाब्जे सहस्रदलमण्डले ।
हंसपार्श्वत्रिकोणे च स्मरेत्तन्मध्यगं गुरुम् ॥ ११८ ॥

* ௨௩. அகார ககார தகாரமுதலிய எழுத்துக்களடைக்கப்பட்ட மூன்று ரேகைகளையுடைய தாமரையிலும், ஆயிரம் இதழ்களையுடைய மண்டலத்திலும், ஹம்ஸத்தை பக்கங்களிலுள்ள திரிகோணத்தின் கண்ணும், அவற்றின் நடுவிலுள்ளவருமாகிய குருவைத் தியானிக்கவேண்டும். ()

नित्यं शुद्धं निराभासं निराकारं निरञ्जनम् ।
नित्यबोधं चिदानन्दं गुरुं ब्रह्म नमाम्यहम् ॥ ११९ ॥

நித்தியமும், சுத்தமும், * ௨௪. நிராபாசமும், நிராகாரமும், நிரஞ்சனமும், நித்தியபோதமும், சிதாநந்தமுமான பிரஹ்மமாகிய குருவை யான் நமஸ்கரிக்கின்றேன். (௧௧௯)

---

* ௨௩. முதல் ரேகையின் ௧௬ வீடுகளில் अ (அ)காரமுதல் ௧௬-ம், இரண்டாவது ரேகையின் ௧௬-ல் क (க)காரமுதல் ௧௬-ம், மூன்றாவது ரேகையின் ௧௬-ல் थ (த)காரமுதல் ௧௬-ருமாக எழுத்துக்களடைக்கப்பட்ட சக்கரம். இது மந்திரசாஸ்திரத்தில் சித்தாரிபரீக்ஷாசக்கரமெனப்படும். இதனை மந்திரகோசதி முதலியவற்றிற் காண்க.

* ௨௪. ஆபாஸம் தோற்றம் (சாயை); அஃதின்றியது நிராபாஸம்.

सकलभुवनसृष्टिः कल्पिताशेषसृष्टिः
निखिलनिगमदृष्टिः सत्पदार्थैकसृष्टिः ।
अतद्गुणपरमेष्टिः सत्पदार्थैकदृष्टिः
भवगुणपरमेष्टिर्मोक्षमार्गैकदृष्टिः ॥ १२० ॥

सकलभुवनरङ्गस्थापनास्तंभयष्टिः
सकरुणरसवृष्टिस्तत्त्वमालासमष्टिः ।
सकलसमयसृष्टिस्सच्चिदानन्ददृष्टिः
निवसतु मयि नित्यं श्रीगुरोर्दिव्यदृष्टिः ॥ १२१ ॥

சகலபுவனசிருஸ்டியும், கற்பிதமான வெல்லாவற்றையும் படைப்பதும், சகலவேததிருஷ்டியும், சத்பதார்த்தமொன்றனையே படைப்பதும், பொய்க்கூட்டங்களின் பரமேஷ்டியும், சத்பதார்த்த மொன்றனையே காண்பதும், பவகுணபரமேஷ்டியும், மோக்ஷமார்க்க மொன்றனையே காண்பதும், சகலபுவனங்களான அரங்கினை ஸ்தாபனஞ்செய்யும் ஸ்தம்பமும், கருணாரசவிருஷ்டியினையுடையதும், தத்துவமாலைகளின் சமஷ்டியும், சகல சமயசிருஷ்டியும், சச்சிதாநந்ததிருஷ்டியுமாகிய ஸ்ரீ குருவின் திவ்யதிருஷ்டியானது என்னிடத்து நித்தியமும் வசிக்குக. (கஉ0-கஉக)

न गुरोरधिकं न गुरोरधिकं न गुरोरधिकं न गुरोरधिकम् ।
शिवशासनतः शिवशासनतः शिवशासनतः शिवशासनतः ॥१२२॥

சிவசாசனத்தால் (ஆஜ்ஞையால்) குருவின் அதிகரித்த தில்லை. சிவசாசனத்தால் குருவின் அதிகரித்த தில்லை. சிவ சாசனத்தால் குருவின் அதிகரித்த தில்லை. சிவசாசனத்தால் குருவின் அதிகரித்ததில்லை. (௧௨௨)

इदमेव शिवं इदमेव शिवं इदमेव शिवं इदमेव शिवम् ।
हरिशासनतो हरिशासनतो हरिशासनतो हरिशासनतः ॥ १२३ ॥

விஷ்ணுவின் சாஸனத்தால் இக்குருவே சிவம். விஷ்ணுவின் சாஸனத்தால் இக்குருவே சிவம். விஷ்ணுவின் சாஸனத்தால் இக்குருவே சிவம். விஷ்ணுவின் சாஸனத்தால் இக்குருவே சிவம். (௧௨௩)

विदितं विदितं विदितं विदितं विजनं विजनं विजनं विजनम् ।
विधिशासनतो विधिशासनतो विधिशासनतो विधिशासनतः ॥१२४॥

பிரஹ்மாவின் சாஸனத்தால் (குரு) தனிமையானதும், அறியப்பட்டதுமாம். பிரஹ்மாவின் சாஸனத்தால் தனிமையானதும், அறியப்பட்டதுமாம். பிரஹ்மாவின் சாஸனத்தால் தனிமையானதும், அறியப்பட்டதுமாம். பிரஹ்மாவின் சாஸனத்தால் தனிமையானதும், அறியப்பட்டதுமாம். (௧௨௪)

एवंविधं गुरुं ध्यात्वा ज्ञानमुत्पद्यते स्वयम् ।
तदा गुरूपदेशेन मुक्तोहमिति भावयेत् ॥ १२५ ॥

இவ்வாறு குருவைத் தியானித்தலால் இயல்பாக ஞானமுண்டாகின்றது. அப்போது குருவுபதேசத்தால் முக்தன் யானென்று பாவித்தல்வேண்டும். (௧௨௫)

गुरूपदिष्टमार्गेण मनः शुद्धिं तु कारयेत् ।
अनित्यं खंडयेत्सर्वं यत्किंचिदात्मगोचरम् ॥ १२६ ॥

குருவினாலுபதேசிக்கப்பட்ட வழியினால் மனதைச் சுத்தப்படுத்தவேண்டும். * ௬௫. ஆத்ம கோசரமான இவ்வெல்லாவற்றையும் அநித்தியமெனக் கண்டித்தல்வேண்டும். (௧௨௬)

ज्ञेयं सर्वं प्रतीतं च ज्ञानं च मन उच्यते ।
ज्ञानं ज्ञेयं समं कुर्यान्नान्यः पंथा द्वितीयकः ॥ १२७ ॥

தோற்றுகின்ற யாவும் * ௬௬. ஞேயமென்றும், மனம் ஞானமென்றும் சொல்லப்படுகின்றது. (ஆதலால்) ஞானஞேயங்களைச் சமமாக்கவேண்டும். இதைவிட வேறு இரண்டாவது மார்க்கமில்லை. (௧௨௭)

* ௬௫. ஆத்மாவினால் அறியப்படுவதான.

* ௬௬. அறியப்படுபொருள்.

किमत्र बहुनोक्तेन शास्त्रकोटिशतैरपि ।
दुर्लभा चित्तविश्रांतिः विना गुरुकृपां पराम् ॥ १२८ ॥

இங்கு வெகுவாய்ச் சொல்லுவதினு லென்ன? சித்த
* ௪௭. விசிராந்தியானது மேலான குருகிருபை யின்றி நூறு
கோடி சாஸ்திரங்களாலும் அடைதற்கரிதாம். (௧௨அ)

करुणाखड्गपातेन छित्वा पाशाष्टकं शिशोः ।
सम्यगानंदजनकः सद्गुरुः सोऽभिधीयते ॥ १२९ ॥

கருணையாகிய வாள்வீச்சினுல் சிசுவின் (சிஷ்யனது)
* ௪௮. பாசங்க ளெட்டினையும் சேதித்துச் செவ்வையாய்
ஆநந்தத்தை யுண்டுபண்ணுபவர் எவரோ அவரே சற்குரு
வெனப்படுகின்ருர். (௧௨௯)

एवं श्रुत्वा महादेवि गुरुनिंदां करोति यः ।
स याति नरकान् घोरान् यावच्चन्द्रदिवाकरौ ॥ १३० ॥

மகாதேவி! இவ்வாறு கேட்டுவிட்டுப் பின் எவன் குரு
நிந்தை செய்கின்ருனே, அவன் சந்திரசூரியர்க ளுள்ளபரி
யந்தம், கோரமான நரகத்தை யடைகிருன். (௧௩0)

---

* ௪௭. இளைப்பாறுதல்.

* ௪௮. தயை, சங்கை (சந்தேகம்), பயம், வெட்கம், நிந்தை, குலம், சீல(ஒழுக்க)ம், தனம் இவை எட்டும் பாசமெனப்படும்.

यावत्कल्पांतको देहस्तावद्देवि गुरुं § स्मरेत् ।
गुरुलोपो न कर्तव्यः स्वच्छंदो यदि वा भवेत् ॥ १३१ ॥

தேவி! எத்தனை கற்பம்வரையில் தேகமிருக்கின்றதோ, அதுவரையில் குருவை ஸ்மரிக்கவேண்டும். சுவச்சந்த (தடையற்றவ) னாயினும் *சக. குருலோபஞ்செய்யலாகாது.

हुंकारेण न वक्तव्यं प्राज्ञशिष्यैः कदाचन ।
गुरोरग्रे न वक्तव्यमसत्यं तु कदाचन ॥ १३२ ॥

பிராஞ்ஞர்களாகிய சிஷ்யர்கள் (குருவைநோக்கி) * ரு௦. ஹுங்காரத்தால் ஒருநாளும் சொல்லலாகாது. குருவன்சந்நிதியில் ஒருநாளும் அசத்தியம் கூறலாகாது. (௧௩௨)

गुरुं त्वंकृत्य हुंकृत्य गुरुसान्निध्यभाषणः ।
अरण्ये निर्जले देशे संभवेद्ब्रह्मराक्षसः ॥ १३३ ॥

குருவை நீ யென்றும் ஹும் மென்றும் சொல்லி, குருசந்நிதியில் வாதிப்பவன் எவனோ, அவன் காட்டில் நீரில்லாத விடத்தில் பிரஹ்மராக்ஷஸனைப் பிறக்கின்றான். (௧௩௩)

---

§ भजेत् = பஜிக்கவேண்டும் என்றும் பாடம்.

* சக. குருவை மறக்கலாகாது.

* ரு௦. ஹுங்காரம் = ஒலிக்குறிப்பு.

अद्वैतं भावयेन्नित्यं सर्वावस्थासु सर्वदा ।
कदाचिदपि नो कुर्यादद्वैतं गुरुसन्निधौ ॥ १३४ ॥

நாடோறும் சகல அவஸ்தைகளிலும் எப்போதும் அத்வைதபாவனை செய்யவேண்டும். (ஆனால்) குருசந்நிதியில் ஒருபோதும் அத்வைதபாவனை செய்யலாகாது. (௧௩௪)

दृश्यविस्मृतिपर्यन्तं कुर्याद्गुरुपदार्चनम् ।
तादृशस्यैव कैवल्यं न च तद्व्यतिरेकिणः ॥ १३५ ॥

திருசியத்தின் மறதியுண்டாகும் வரையில் குருபாதங்களை அர்ச்சிக்கவேண்டும். அப்படிப்பட்டவனுக்கே கைவல்ய (மோக்ஷ) சித்தியுண்டாகும். அதற்கன்னியமானவனுக்குண்டாகாது. (௧௩௫)

अपि संपूर्णतत्त्वज्ञो गुरुत्यागी भवेद्यदा ।
भवत्येव हि तस्यान्तकाले विक्षेपमुत्कटम् ॥ १३६ ॥

சகலதத்துவங்களையுமுணர்ந்தவனாயினும், குருவைத்தியாகம் செய்வானாயின், அவனுக்கு மரணகாலத்தில் மிகுந்த விக்ஷேபமுண்டாகவே செய்யும்; நிச்சயம். (௧௩௬)

गुरुकार्यं न लंघेत नापृष्ट्वा कार्यमाचरेत् ।
न ह्युत्तिष्ठेद्दिशेऽनत्वा गुरुसद्भावशोभितः ॥ १३७ ॥

குருவின் * நிக. சத்பாவத்தால் சிறப்படைந்தவன் குருவின் காரியத்தைக் கடக்கலாகாது. குரவனைக் கேட்காமல் காரியத்தை யாசரிக்கலாகாது. குரவனுள்ள திசையை நோக்கி நமஸ்கரியாமல் எழுந்திருக்கலாகாது. (௧௩௭)

गुरौ सति स्वयं देवि परेषान्तु कदाचन ।
उपदेशं न कुर्यात् तदा चेद्राक्षसो भवेत् ॥ १३८ ॥

தேவி! குருவானவர் (அருகில்) இருக்கத் தான் ஒரு போதும் பிறருக் குபதேசிக்கக்கூடாது. அப்படிச் செய்வாராயின் அவன் இராக்ஷசனாவன். (௧௩௮)

न गुरोराश्रमे कुर्याद्दुष्पानं परिसर्पणम् ।
दीक्षा व्याख्या प्रभुत्वादि गुरोराज्ञां न कारयेत् ॥ १३९ ॥

குரவன் ஆசிரமத்தில் கெட்ட குடி, உலாவுதல், தீக்ஷை, வியாக்கியானம், பிரபுத்துவ முதலியவற்றைச் செய்யலாகாது. குருவின் ஆணையைச் செய்விக்கலாகாது (பிறரைக்கொண்டு செய்யலாகாது). (௧௩௯)

नोपाश्रमं च पर्यंकं न च पादप्रसारणम् ।
नांगभोगादिकं कुर्यान्न लीलामपरामपि ॥ १४० ॥

---

* நிக. சத்பாவம் = குரவனை ஈசனாக மதித்தல்.

* ருஉ. உபாச்சிரமம், மஞ்சத்திலிருத்தல், காலை நீட்டல், * ருங. அங்கபோகமுதலியவற்றைச் செய்யலாகாது. மற்றைய லீலை (விநோதங்)களையும் செய்யலாகாது. (கச0)

गुरूणां सदसद्वापि यदुक्तं तन्न लंघयेत् ।
कुर्वन्नाज्ञां दिवारात्रौ दासवन्निवसेद्गुरौ ॥ १४१ ॥

குரவன் வாக்கியம் நன்மையாயினும் தீமையாயினும் அதனைக் கடக்கலாகாது. இரவும் பகலும் அவராணையைச் செய்துகொண்டு, அடிமையைப் போலக் குரவனிடத்தே வசிக்கவேண்டும். (கசக)

अदत्तं न गुरोर्द्रव्यमुपभुंजीत कर्हिचित् ।
दत्तं च रङ्कवद्ग्राह्यं प्राणोप्येतेन लभ्यते ॥ १४२ ॥

கொடுக்கப்படாத குருவின் திரவியத்தை ஒருபோது மநுபவிக்கலாகாது. கொடுத்ததை அடிமையைப்போற் கொள்ளவேண்டும். இதனாற் பிராணனும் பெறப்படுகின்றது. (கசஉ)

पादुकासनशय्यादि गुरुणा यदभीष्टितम् ।
नमस्कुर्वीत तत्सर्वं पादाभ्यां न स्पृशेत् क्वचित् ॥ १४३ ॥

---

* ருஉ. உபாச்சிரமம் = பக்கத்துக்குடில்.
* ருங. அங்கபோகம் = பாதம்பிடித்துக்கொள்ளல் முதலியன.

குரவனால் விரும்பப்பட்ட பாதுகை ஆசனம் படுக்கை முதலிய எல்லாவற்றையும் நமஸ்கரிக்கவேண்டும். எதனையும் பாதங்களால் பரிசிக்கலாகாது. (௧௪௩)

गच्छतः पृष्टतो गच्छेद्गुरुच्छायां न लंघयेत् ।
नोल्बणं धारयेद्वेषं नालंकारांस्ततोल्बणान् ॥ १४४ ॥

குரவன் நடக்கும்போது அவர்பின்னே செல்லவேண்டும். குரவன் நிழலைத் தாண்டலாகாது, அதிக வேஷத்தையும் அப்படியே அதிக அலங்காரத்தையும் (அவர் முன்) தரிக்கலாகாது. (௧௪௪)

गुरुनिंदाकरं दृष्ट्वा धावयदथ वासयेत् ।
स्थानं वा तत्परित्याज्यं जिह्वाच्छेदाक्षमो यदि ॥ १४५ ॥

குருவை நிந்திப்பவனைப் பார்த்து நாவைச் சேதிக்க சாமர்த்திய மில்லையாயின், அவ்விடத்தை விட்டு ஓடிப் பின் வந்து வசித்தல்வேண்டும், அல்லது அந்த இடத்தையே விட்டுவிடவேண்டும். (௧௪௫)

नोच्छिष्टं कस्यचिद्देयं गुरोराज्ञां न च त्यजेत् ।
कृत्स्नमुच्छिष्टमादाय हविर्वद्भक्षयेत्स्वयम् ॥ १४६ ॥

குருவின் *௫௪. உச்சிட்டத்தை யொருவனுக்கும்

* ௫௪ உண்டு மிகுந்ததை.

கொடுக்கலாகாது; (அவர்) ஆணையை விடலாகாது. உச்சிட்டம் முழுவதையும் ஏற்றுக்கொண்டு ஹவியினைப்போல தானே புசிக்கவேண்டும். (கசசு)

नानृतं नाप्रियं चैव न गर्वं नापि वा बहु ।
न नियोगपरं ब्रूयात् † गुरोराज्ञां विभावयेत् ॥ १४७ ॥

பொய்யும், பிரியமில்லாததும், கர்வமுடையதும், அதிகமானதும், கட்டளையிடுதற்றன்மையதுமாகிய வார்த்தைகளைப் பேசலாகாது. குரவன் ஆணையை விசேஷமாய் மதித்தல்வேண்டும். (கசஎ)

प्रभो देवकुलेशानां स्वामिन्राजन् कुलेश्वर ।
इति संबोधनैर्भीतो * गुरुभावेन सर्वदा ॥ १४८ ॥

பிரபுவே! தேவகுலத்தின் ஈசர்களுக்குச் சுவாமியே! அரையனே! (எம்) குலவிறைவனே! யென்னும் விளிகளால் (அவரை) அழைப்பவனுய், எப்போதும் குருபாவனையோடு பயமுடையவனு யிருத்தல்வேண்டும். (கசஅ)

---

† साधको गुरुसन्निधौ = சாதகன் குருசந்நிதியில் என்றும் பாடம்.

* संचरेद्गुरुसन्निधौ = பயமுடையவனுய்க் குருசந்நிதியில் சஞ்சரிக்க என்றும் பாடம்.

मुनिभिः पन्नगैर्वापि सुरैर्वा शापितो यदि ।
कालमृत्युभयाद्वापि गुरुः संत्राति पार्वति ॥ १४९ ॥

பார்வதி! முனிவராலும் * உரு, பன்னகராலும் சுரர்களாலும் சபிக்கப்பட்டவனாயினும், அல்லது காலமிருத்தியுவினுற் பயந்தவனாயினும், அதனின்றும் அவனைக் குருவானவர் இரக்ஷிப்பார். (கசகூ)

अशक्ता हि सुराद्याश्च ह्यशक्ता मुनयस्तथा ।
गुरुशापोपपन्नस्य रक्षणाय च कुत्रचित् ॥ १५० ॥

குருவின் சாபத்தை யடைந்தவனை இரக்ஷித்தற்குச் சுரர்முதலியோரும் சக்தராகார். அப்படியே முனிவரும் எவ்விடத்தும் சக்தராகார். (கரு௦)

मंत्रराजमिदं देवि गुरुरित्यक्षरद्वयम् ।
स्मृतिवेदपुराणानां सारमेव न संशयः ॥ १५१ ॥

தேவி! இந்தக் குருவென்னும் மந்திரராஜமான இரண்டெழுத்தும் ஸ்மிருதிவேதபுராணங்களின் சாரமேயாம்; சம்சயமில்லை. (கருக)

* உரு. நாகர்.

सत्कारमानपूजार्थं † दण्डकाषायधारणः ।
स संन्यासी न वक्तव्यः संन्यासी ज्ञानतत्परः ॥ १५२ ॥

மரியாதை, மானம், பூஜைமுதலியவற்றின் பொருட்டுத் தண்டகாஷாயங்களைத் தரித்தவன் எவனோ, அவன் சந்நியாசி யெனத்தகான். ஞானதற்பரனே சந்நியாசியாவன்.

विजानंति महावाक्यं गुरोश्चरणसेवया ।
ते वै संन्यासिनः प्रोक्ता इतरे वेषधारिणः ॥ १५३ ॥

குரவன் பாதசேவையினால் மகாவாக்கியத்தை யறிகின்றவ ரெவரோ அவர்களே சந்நியாசிக ளெனப்படுவார்கள். மற்றையோர் வேஷதாரிக ளாவர். (கருங)

नित्यं ब्रह्म निराकारं निर्गुणं ** बोधयेत्परम् ।
भासयन्ब्रह्मभावं च दीपो दीपांतरं यथा ॥ १५४ ॥

---

† गुरुशब्दधरोनरः । स याति नरकान्देवि नास्ति संदेहमण्वपि ॥
குருசப்தத்தினைத் தரித்துள்ள நரன் எவனோ, அவன் நரகங்களை யடைவான். தேவி! இதிற் சந்தேகம் சிறிது மில்லை. என்றும் பாடம்.

** सत्यचिद्घनं । यः साक्षात्कुरुते लोके गुरुत्वं तस्य शोभते ॥
நித்திய நிராகார நிர்குண சத்ய சித்கனமான பிரஹ்மத்தை எவன் சாக்ஷாத்கரிக்கின்றானோ, அவனுடைய குருத்துவம் உலகத்தில் சோபிக்கின்றது. என்றும் பாடம்.

ஓர் விளக்கு மற்றோர்விளக்கை விளக்குவதுபோல (குருவானவர்) பிரஹ்மத்தன்மையாய் விளங்குகின்றவராய், நித்தியமும் நிராகாரமும் நிர்க்குணமுமான பரப்பிரஹ்மத்தைப் போதித்தல்வேண்டும். (௧௫௪)

गुरुप्रसादतः स्वात्मन्यात्मारामनिरीक्षणात् ।
समता मुक्तिमार्गेण स्वात्मज्ञानं प्रवर्तते ॥ १५५ ॥

குரவன் கிருபையால் தனதாத்மாவினிடத்து ஆத்மாராமனை நோக்குதலால் சமத்தன்மையாகிய முக்திமார்க்கத்தால் தனது ஆத்மஞானம் பிரவிருத்திக்கின்றது. (௧௫௫)

आब्रह्मस्तम्भपर्यंतं परमात्मस्वरूपकम् ।
स्थावरं जंगमं चैव प्रणमामि जगन्मयम् ॥ १५६ ॥

பிரஹ்மாமுதல் * ௫௬. ஸ்தம்பபரியந்தமான ஸ்தாவரமும் ஜங்கமமும் பரமாத்மசொரூபமாம். ஆதலால் ஜகமயமான குருவை நமஸ்கரிக்கின்றேன். (௧௫௬)

वन्देहं सच्चिदानन्दं भावातीतं जगद्गुरुम् ।
नित्यं पूर्णं निराकारं निर्गुणं स्वात्मसंस्थितम् ॥ १५७ ॥

---

* ௫௬. ஸ்தம்ப மென்பது ஓர்வகைச் சிறுபுல். ஓர்வகைச் சிறு பூச்சி யென்று சொல்லுவாருமுண்டு.

சச்சிதாநந்தமும், * ருஎ. பாவாதீதமும், நித்தியமும், பூர்ணமும், நிராகாரமும், நிர்க்குணமும், தனதாத்மாவிலிருப்பதுமான சகத்குருவை நமஸ்கரிக்கின்றேன். (கருஎ)

परात्परतरं ध्यायेन्नित्यमानंदकारकम् ।
हृदयाकाशमध्यस्थं शुद्धस्फटिकसन्निभम् ॥ १५८ ॥

மேலானவற்றிற் கெல்லாம் மேலானதும், நித்தியமும், ஆநந்தத்தை யுண்டுபண்ணுவதும், இதயாகாயநடுவிலிருப்பதும், சுத்தஸ்படிகத்தைப் போன்றதுமான குருவைத் தியானிக்கின்றேன். (கருஅ)

स्फटिके स्फाटिकं रूपं दर्पणे दर्पणो यथा ।
तथात्मनि चिदाकारमानन्दं सोहमित्युत ॥ १५९ ॥

ஸ்படிகத்தில் ஸ்படிகத்தன்மைவடிவமும், கண்ணாடியிற் கண்ணாடியும் எப்படி அபேதமோ, அப்படியே ஆத்மாவினிடத்துச் சிதாகாராநந்த மெதுவோ அது யானென்பது நிச்சயம். (கருகூ)

अंगुष्ठमात्रं पुरुषं ध्यायेच्च चिन्मयं हृदि ।
तत्र स्फुरति यो भावः शृणु तत्कथयामि ते ॥ १६० ॥

---

* ருஎ. பாவிக்கப்படாதது.

அங்குஷ்டமாத்திரமும், சின்மயமுமாகிய புருஷனை இதயத்தில் தியானிக்கின், அங்கு எந்தத்தன்மை விளங்கு (ஸ்புரிக்)கின்றதோ, அதனை உனக்குச் சொல்லுகின்றேன்; கேட்பாயாக. (கசுO)

अजोहममरोहं च ह्यनादिनिधनो ह्यहम् ।
अविकारश्चिदानन्दो ह्यणीयान् महतो महान् ॥ १६१ ॥

அணுவிற்கு அணுவும்; மகத்திற்கு மகத்தும், அவிகாரமும், சிதாநந்தமுமான அஜன் யான்; அமரன் யான்; ஆதியந்தமில்லாதவன் யான். (கசுக)

अपूर्वमपरं नित्यं स्वयंज्योतिर्निरामयम् ।
विरजं परमाकाशं ध्रुवमानन्दमव्ययम् ॥ १६२ ॥

* ருஅ. அபூர்வமும், * ருகூ. அபரமும், நித்தியமும், * சு0. சுயஞ்சோதியும், * சுக. நிராமயமும், * சுஉ.

---

* ருஅ. முன்னில்லாதது = காரணமில்லாதது.
* ருகூ. தன்னைவிட மேலானதொன்றில்லாதது.
* சு0. தானாய் விளங்குவது.
* சுக. நோயில்லாதது.
* சுஉ. அழுக்கின்றியது.

விரஜமும், * சுஙூ. பரமாகாயமும், * சுச. துருவமும், ஆநந்தமும், * சுரு. அவ்வியயமும். (கசுஉ)

अगोचरं तथाऽगम्यं नामरूपविवर्जितम् ।
निःशब्दं तु विजानीयात्स्वभावाद्ब्रह्म पार्वति ॥ १६३ ॥

பார்வதி! * சுசு. அகோசரமும், அப்படியே அகம்மியமும் (அறியப்படாததும்), நாமரூபங்களின்றியதும், சத்தமின்றியதுமாகிய பிரஹ்மம் சுபாவமாக அறியப்படுகின்றது. (கசுங)

यथा गंधस्वभावत्वं कर्पूरकुसुमादिषु ।
शीतोष्णत्वस्वभावत्वं तथा ब्रह्मणि शाश्वतम् ॥ १६४ ॥

எப்படிக் கர்ப்பூரம் புஷ்ப * சுஎ. முதலியவற்றில் கந்தசுபாவத்துவமும், சீதோஷ்ணத்தன்மைகளின் சுபாவமுமிருக்கின்றதோ, அப்படியே பிரஹ்மத்தில் சாசுவதத்தன்மை யிருக்கின்றது. (கசுச)

---

* சுங. மேலான வெளி.
* சுச. என்றுமுள்ளது.
* சுரு. குறைவு நிறைவில்லாதது.
* சுசு. எதற்கு மெட்டாதது.
* சுஎ. முதலிய வென்பதனால் நீர் நெருப்புகளைக் கொண்டு அவற்றிலுள்ள குளிர்ச்சி சூடெனினு மமையும்.

यथा निजस्वभावेन कुण्डलकटकादयः ।
सुवर्णत्वेन तिष्ठन्ति तथाहं ब्रह्म शाश्वतम् ॥ १६५ ॥

குண்டலம் கடகமுதலியன எப்படி நிஜசுபாவத்தால் சுவர்ணத்தன்மையா யிருக்கின்றனவோ, அப்படியே யான் சாசுவதமாகிய பிரஹ்மம். (௧௬௫)

स्वयं तथाविधो भूत्वा स्थातव्यं यत्र कुत्रचित् ।
कीटो भृङ्ग इव ध्यानात्तथा भवति तादृशः ॥ १६६ ॥

* சா அ, கீடம் (புழு) குளவிபோன்ற தியானத்தினல் எப்படி அவ்வடிவமே யாகின்றதோ, அப்படியே (யான் பிரஹ்மமென்னும் பாவனையால்) இயல்பாய் அத்தன்மைய னுகி எவ்விடத்திலாயினு மிருத்தல்வேண்டும். (௧௬௬)

गुरुध्यानं तथा कृत्वा स्वयं ब्रह्ममयो भवेत् ।
पिण्डे पदे तथा रूपे मुक्तास्ते नात्र संशयः ॥ १६७ ॥

---

* கூ அ. குளவி (வண்டு) ஒரு புழுவினைக் கொட்டி அதனைக் கூண்டில் அடைத்து வைக்கும். அப்புழு பயத்தால் கொட்டிய அக்குளவியினையே நினைத்துக்கொண்டிருந்து காலாந்தரத்தில் அக்குளவிவடிவாய்க் கூட்டைவிட்டு வெளியில் பறந்துபோகும். அதுபோல் குருவனுபதேசத்தால் இச்சீவன் யான் பிரஹ்மமென்று இடைவிடாது நினைத்துக்கொண்டிருந்து அவ்வடிவமே யாகின்முன். இதனையே பிரமரகீடநியாய மென்பர்.

அப்படியே அந்தக்கரணத்தில் குருவைத் தியானித்தலால் தானே பிரஹ்மமய மாகின்றான். பிண்டத்திலும் பதத்திலும் அப்படியே உருவத்திலும் அவர்கள் முத்தராகின்றனர். இதிற் சமுசய மில்லை. (கஙஎ)

पार्वत्युवाच :—

पिण्डं किं तु महादेव पदं किं समुदाहृतम् ।
रूपातीतं च रूपं किं एतदाख्याहि शंकर ॥ १६८ ॥

பார்வதிதேவி கேட்கலாயினர்:—மகாதேவரே! பிண்டமென்பது யாது? பதமென்பது யாது? உருவமென்பது யாது? உருவாதீதமென்பது யாது? சங்கரரே! இதனையெனக்குச் சொல்லியருளல்வேண்டும், (கஙஅ)

श्रीमहादेव उवाच :—

पिण्डं कुण्डलिनी शक्तिः पदं हंसमुदाहृतम् ।
रूपं बिंदुरिति ज्ञेयं रूपातीतं निरञ्जनम् ॥ १६९ ॥

ஸ்ரீ மகாதேவர் சொல்லலாயினர்:—பிண்டம் குண்டலினிசக்தி; பதம் ஹம்ஸ மெனப்படுகின்றது. உருவம் விந்துவென்று அறியத்தக்கதாம். உருவாதீதம் நிரஞ்சனமாம். (கஙக)

पिण्डे मुक्ताः पदे मुक्ता रूपे मुक्ता वरानने ।
रूपातीते तु ये मुक्तास्ते मुक्ता नात्र संशयः ॥ १७० ॥

பார்வதி! பிண்டத்தில் முக்தர்களும், பதத்தில் முக்தர்களும், உருவத்தில் முக்தர்களும், உருவாதீதத்தில் முக்தர்களுமாகிய அவர்கள் முக்தர்களே. இதிற் சமுசய மில்லை.

गुरोर्ध्यानेनैव नित्यं देही ब्रह्ममयो भवेत् ।
स्थितश्च यत्र कुत्रापि मुक्तोऽसौ नात्र संशयः ॥ १७१ ॥

நித்தியம் குருவைத் தியானித்தலினாலேயே தேகி பிரஹ்மமய மாகின்றான். அவன் எவ்விடத்திருக்கினும் முக்தனாகின்றான். இதிற் சமுசய மில்லை. (கஎக)

* ज्ञानं वैराग्यमैश्वर्यं यशः श्रीः स्वमुदाहृतम् ।
षड्गुणैश्वर्ययुक्तो हि भगवान् श्रीगुरुः प्रिये ॥ १७२ ॥

பிரியமுள்ளவளே! ஞானம், வைராக்கியம், ஐசுவரியம், கீர்த்தி, திரு, சொல்லப்பட்ட செல்வ மென்னும் ஆறு குணங்களாகிய ஐசுவரியத்தை யுடையவரான பகவானே ஸ்ரீ குருவாவார்.

---

* ज्ञानं स्वानुभवः शान्तिर्वैराग्यं वक्तृता धृतिः ஞானம், ஸ்வாநுபவம், சாந்தி, வைராக்கியம், சொல்லாற்றல், தைரியம் என்னும் என்றும் பாடம்.

गुरुः शिवो गुरुर्देवो गुरुर्बन्धुः शरीरिणाम् ।
गुरुरात्मा गुरुर्जीवो गुरोरन्यन्न विद्यते ॥ १७३ ॥

*சரீரிகளுக்குக் குரவனே சிவம்; குரவனே தேவன்; குரவனே பந்து; குரவனே ஆத்மா; குரவனே ஜீவன்; குரவனுக்கு வேறான தில்லை.* (கஎங)

एकाकी निस्पृहः शान्तश्चितासूयादिवर्जितः ।
बाल्यभावेन यो भाति ब्रह्मज्ञानी स उच्यते ॥ १७४ ॥

*தனித்தவனாய், ஆசையற்றவனாய்ச் சாந்தனாய், வியாகூலம் அசூயைமுதலியவை யில்லாதவனாய்ப் பாலியத்தன்மையனாய், எவன் விளங்குகின்றானோ, அவன் பிரஹ்மஞானி யெனப்படுகின்றான்.* (கஎச)

न सुखं वेदशास्त्रेषु न सुखं मंत्रयंत्रके ।
गुरोः प्रसादादन्यत्र सुखं नास्ति महीतले ॥ १७५ ॥

*வேதசாஸ்திரங்களிற் சுக மில்லை. மந்திரயந்திரங்களிலும் சுக மில்லை. பூமியிற் குரவன் பிரசாதத்திற் கந்நியமான விடங்களிற் சுக மென்ப தில்லை.* (கஎரு)

चार्वाकवैष्णवमते सुखं प्राभाकरे नहि ।
गुरोः पादांतिके यद्वत्सुखं वेदांतसंमतम् ॥ १७६ ॥

குரவன் பாதத்தருகி லுண்டாகும் வேதாந்தசம்மத மான சுகத்தைப்போன்ற சுகம் சார்வாகவைஷ்ணவமதங்க ளிலும், பிரபாகரமதத்திலு மில்லை. (கஎகூ)

न तत्सुखं सुरेंद्रस्य न सुखं चक्रवर्तिनाम् ।
यत्सुखं वीतरागस्य मुनेरेकांतवासिनः ॥ १७७ ॥

எந்தச் சுகம் இராகமொழிந்த முனியாகிய ஏகாந்த வாசிக் குண்டாகின்றதோ, அந்தச்சுகம் இந்திரனுக்கு முண் டாகிறதில்லை; சக்கிரவர்த்திகளுக்கு முண்டாகிறதில்லை. ( )

नित्यं ब्रह्मरसं पीत्वा तृप्तो यः परमात्मनि ।
इंद्रं च मन्यते ** रंकं नृपाणां तत्र का कथा ॥ १७८ ॥

நித்தியம் பிரஹ்ம ரஸத்தைப் பருகி எவன் பரமாத்மா வினிடத்துத் திருப்தனு யிருக்கின்றானோ, அவன் இந்திரனை அடிமையாகக் கருதுகின்றானெனின், அங்கு அரசர்களின் வார்த்தையைச் சொல்லுவானேன்? (கஎஅ)

यतः परमकैवल्यं गुरुमार्गेण वै भवेत् ।
गुरुभक्तिरतः कार्या सर्वदा मोक्षकांक्षिभिः ॥ १७९ ॥

எக்காரணத்தால் குருவின் மார்க்கத்தால் மேலான மோக்ஷ முண்டாகிறதோ, அக்காரணத்தால் மோக்ஷத்தை

---

** तुच्छं = துச்சமாக என்றும் பாடம்.

விரும்புகிறவர்களால் எப்பொழுதும் குருவின் பக்தி செய்ய வேண்டியதாம். (கஎகூ)

एक एवाद्वितीयोहं गुरुवाक्येन निश्चितः
एवमभ्यस्यता नित्यं न सेव्यं वै वनांतरम् ॥ १८० ॥

ஒரே * கூகூ. அத்துவிதீயன் யானென்பது குருவாக்கியத்தினால் நிச்சயிக்கப்பட்டது. இவ்வாறு தினமும் அப்பியசிப்பவனால் வனாந்தரம் சேவிக்கவேண்டியதாகாது. ( )

अभ्यासान्निमिषेणैव समाधिमधिगच्छति ।
आजन्मजनितं पापं तत्क्षणादेव नश्यति ॥ १८१ ॥

அப்பியாசத்தினால் நிமிஷமாத்திரத்தில் சமாதியை அடைகின்றான். ஜன்மபரியந்த முண்டாகிய பாபங்கள் யாவும் அக்கணமே நசிக்கின்றன. (கஅக)

किमावाहनमव्यक्ते व्यापके किं विसर्जनम् ।
अमूर्तौ च कथं पूजा कथं ध्यानं निरामये ॥ १८२ ॥

* எ0. அவ்வியக்தத்தில் * எக. ஆவாகன மேது?

* கூகூ. இரண்டாவதற்றவன்.

* எ0. வெளிப்படாதது.

* எக. ஓர் ஆதனத்து எழுந்தருளச்செய்தல்.

வியாபகத்தில் * எஉ. விஸர்ஜன மேது? * எகூ. அமூர்த்தத்திற் பூஜை யேது? நிராமயத்திற் றியான மெப்படி? ()

गुरुर्विष्णुः सत्त्वमयो राजसश्चतुराननः।
तामसो रुद्ररूपेण सृजत्यवति हन्ति च॥ १८३॥

குருவானவர் இராஜஸமயமான பிரஹ்மாவாய்ச் சிருஷ்டிக்கின்றார். சத்துவமயமான விஷ்ணுவாய் இரக்ஷிக்கின்றார். தாமஸருத்திரவடிவமாய்ச் சங்கரிக்கின்றார். (கஅங)

स्वयं ब्रह्ममयो भूत्वा तत्परञ्चावलोकयेत्।
परात्परतरं नान्यत् सर्वगतं निरामयम्॥ १८४॥

சுவயம் (தானே) பிரஹ்மமயமாய் அந்தப் பரத்தைப் பார்க்குக. பரத்திற்கு மேலானது வேறில்லை, அஃது எல்லாவற்றிலு மிருக்கும் நிராமயமாம். (கஅச)

तस्यावलोकनं प्राप्य सर्वसंगविवर्जितः।
एकाकी निस्पृहः शांतः स्थातव्यं तत्प्रसादतः॥ १८५॥

அத்தன்மைய குருவின் அவலோகனத்தை (பார்வையை) யடைந்து, அவரது பிரசாதத்தால் சர்வசங்கத்தையும்

---

* எஉ. அவ்வாதனத்திருந்தும் முன்னிருந்தவிடத்திற் கனுப்புதல்

* எகூ. வடிவமில்லாதது.

விட்டவனைத் தனித்தவனை ஆசையற்றவனைச் சாந்தனைய் நிலைத்திருக்கவேண்டும். (கஅரு)

लब्धं वाऽथ न लब्धं वा स्वल्पं वा बहुलं तथा।
निष्कामेनैव भोक्तव्यं सदा संतुष्टमानसः ॥ १८६ ॥

எப்போதும் சந்தோஷமடைந்த மனதுடைய அவன் பெற்றதையும் பெறாததையும் அற்பத்தையும் அதிகத்தையும் நிஷ்காமமாகவே அனுபவிக்கவேண்டும். (கஅகூ)

सर्वज्ञपदमित्याहुर्देही सर्वमयो भुवि।
सदानंदः सदा शांतो रमते यत्र कुत्राचित् १८७ ॥

புவியில் தேகி சதாநந்தனை் என்றும் சாந்தனுய்ச் சர்வமயனை், எங்கெந்த விடத்தில் இரமிக்கின்றானே, அதனைச் சர்வஞ்ஞபதமென்று கூறுவர். (கஅஎ)

यत्रैव तिष्ठते सोपि सदेशः पुण्यभाजनः।
मुक्तस्य लक्षणं देवि तवाग्रे कथितं मया ॥ १८८ ॥

எந்தவிடத்து அவனிருக்கின்றானே அத்தேசம் புண்ணியக்ஷேத்திரமாம். தேவி! முக்தனிலக்கணம் நின்முன் என்னாற் சொல்லப்பட்டது. (கஅஅ)

उपदेशस्त्वयं देवि गुरुमार्गेण मुक्तिदः ।
गुरुभक्तिस्तथात्यंता कर्तव्या वै मनीषिभिः ॥ १८९ ॥

தேவி! இவ்வுபதேசமானது குருவின் மார்க்கத்தால் முக்தியைத் தருவதாம். அப்படியே விவேகிகளால் குரு பக்தியானது அத்தியந்தம் செய்யத்தக்கதாம். (கஅகூ)

नित्ययुक्ताश्रयः सर्वो वेदकृत्सर्ववेदकृत् ।
स्वपरज्ञानदाता च तं वन्दे गुरुमीश्वरम् ॥ १९० ॥

நித்தியமும் பொருத்தமுள்ள ஆசிரயமானவரும், எல்லாமாயிருப்பவரும், வேதத்தைச் செய்தவரும், சர்வஞானங்களை யுண்டுபண்ணுபவரும், தனது ஞானத்தையும் பிற ஞானத்தையும் தருபவரு மாவர். அந்தக்குருவனாகிய ஈசுவரனை நமஸ்கரிக்கின்றேன். (ககூ௰)

यद्यप्यधीता निगमाः षडंगा आगमाः प्रिये ।
अध्यात्मादीनि शास्त्राणि ज्ञानं नास्ति गुरुं विना ॥ १९१ ॥

பிரியமுள்ளவளே! வேதங்களையும், * எ௬. ஆறங்கங்களையும், ஆகமங்களையும், * எ௫. அத்தியாத்மமுதலிய

* எ௬. ஆறங்கம் = சிக்ஷை, கல்பம், வியாகரணம், நிருத்தம், சந்தசு, ஜோதிஷம் என்பன.

* எ௫. ஆத்மாவை உணர்த்தும் நூல் அத்தியாத்மசாஸ்திரம்.

சாஸ்திரங்களையும் ஓதியிருந்தபோதினும், குருவின்றி ஞானமுண்டாகாது. (கககக)

शिवपूजारतो वापि विष्णुपूजारतोथवा ।
गुरुतत्त्वविहीनश्चेत्तत्सर्वं व्यर्थमेव हि ॥ १९२ ॥

சிவபூஜையில் ரதனாகவிருந்தாலும், அல்லது விஷ்ணு பூஜையில் ரதனாக விருந்தாலும் குருதத்துவத்தைக் கைப்பற்றாதவனாயின், அவ்வெல்லாம் வியர்த்தமேயாம். நிச்சயம்.

शिवस्वरूपमज्ञात्वा शिवपूजा कृता यदि ।
सा पूजा नाममात्रं स्याच्चित्रदीप इव प्रिये ॥ १९३ ॥

சிவனுடைய ஸ்வரூபத்தையறியாமல், சிவபூஜை செய்வாயின், அது சித்திரத்திலுள்ள விளக்கைப்போல் பேருக்குமாத்திரம் பூஜையாகும். (ககநு)

सर्वं स्यात्सफलं कर्म गुरुदीक्षाप्रभावतः ।
गुरुलाभात्सर्वलाभो गुरुहीनस्तु बालिशः ॥ १९४ ॥

குருவினது தீக்ஷையின் மகிமையினால் எல்லாக் கருமங்களும் பலனோடு கூடியவைகளாம். (ஒரு) குருவின் இலாபத்தினால் எல்லா (விதமான) இலாபங்களும் உண்டாகும். குருவில்லாதவன் மூடனாவன். (ககசு)

गुरुहीनः पशुः कीटः पतङ्गो वक्तुमर्हति ।
शिवः रूपं स्वरूपञ्च न जानाति यतस्स्वयं ॥ १९५ ॥

எதனால் சிவரூபத்தினையும் தனது (ஆத்ம) ரூபத்தினையும் தானாக அறியமாட்டானோ, அதனால் குருவில்லாதவன் மிருகமென்றாவது பூச்சியென்றாவது விட்டிலென்றாவது சொல்லுதற் குரியவனாகின்றான். (ககரு)

तस्मात्सर्वप्रयत्नेन सर्वसंगविवर्जितः ।
विहाय शास्त्रजालानि गुरुमेव समाश्रयेत् ॥ १९६ ॥

ஆகையால் எல்லாவிதமான பற்றுக்களையும் விட்டவனாய்ச் சாஸ்திரக்கூட்டங்களை விட்டு முழுப் பிரயத்தினத்தோடும் குருவினையே செவ்வையாய் ஆசிரயிக்கவேண்டும்.()

निरस्तसर्वसंदेहो एकीकृत्य सुदर्शनम् ।
रहस्यं यो दर्शयति भजामि गुरुमीश्वरम् ॥ १९७ ॥

எவர் சகல சந்தேகங்களை மொழிந்தவராய் இரகசியமான நல்ல தரிசனத்தை யொன்றுபடுத்திக் காட்டுகின்றாரோ, அத்தன்மைய குருவாகிய ஈசுவரனைப் பஜிக்கின்றேன். (ககள)

ज्ञानहीनो गुरुस्त्याज्यो मिथ्यावादी विडंबकः ।
स्वविश्रांतिं न जानाति परशांतिं करोति किम् ॥ १९८ ॥

ஞானஹீனனாகிய குரு விடத்தக்கவனாவன். அவன் மித்தியாவாதியாகிய * எகூ. விடம்பகனாவன். தனது விசிராந்தியை யறியாதவன் பிறர்சாந்தியைச் செய்வனா? என்னே? (ககூஅ)

शिलायाः किं परं ज्ञानं शिलासंघप्रतारणे ।
स्वयं तर्त्तुं न जानाति परं निस्तारयेत्कथम् ॥ १९९ ॥

சிலையோடு (கல்லோடு) சேர்க்கப்பட்டுள்ள தன்னைக்கடக்கச்செய்வதில் சிலைக்கு மேலான ஞானம் ஏது? தன்னைக்கடப்பித்துக்கொள்ள வறியாது, எங்ஙனம் பிறரைக்கடத்துவிக்கும்? (அதுபோலத் தன்னைக் காத்துக்கொள்ளாதவன் பிறரை எப்படிக் காப்பன்? என்பது கருத்து). (ககூகூ)

न वन्दनीयास्ते कष्टं दर्शनाद्भ्रांतिकारकाः ।
वर्जयेत्तान् गुरून् दूरे धीरस्य तु समाश्रयेत् ॥ २०० ॥

ஐயோ! கஷ்டம்! அவர்கள் வந்திக்கத்தக்கவர்களல்லர்; தரிசனத்தால் பிராந்தியை யுண்டுபண்ணுபவராவர்.

---

* எகூ. விடம்பகன் = வேஷதாரி; வஞ்சகன்.

அத்தன்மைய குரவரை யொழித்துத் தீரரைச் செவ்வையா யாசரிக்கவேண்டும். (உ00)

पाखंडिनः पापरता नास्तिका भेदबुद्धयः ।
स्त्रीलंपटा दुराचाराः कृतघ्ना बकवृत्तयः ॥ २०१ ॥

* எஎ. பாஷண்டிகளும், பாவத்தையே செய்வோரும், நாஸ்திகரும், பேதபுத்தியுடையோரும், பெண்ணாசை பிடித்தோரும், துராசாரர்களும், செய்ந்நன்றிமறந்தோரும், * எஅ. கொக்குச்செய்கையுடையோரும். (உ0க)

कर्मभ्रष्टाः क्षमानष्टा निंद्यतर्कैश्च वादिनः ।
कामिनः क्रोधिनश्चैव हिंस्राश्चंडाः शठास्तथा ॥ २०२ ॥

கர்மத்தினின்று நழுவினவர்களும், க்ஷமையொழிந்தோரும், நிந்திக்கப்படுந் தர்க்கங்களால் வாதிப்பவரும்,

---

* எஎ. வேதத்திற்குப் புறம்பானவர்.

* எஅ. கொக்கு அசைவற்றிருந்து, தக்க மீன்சமீபித்தவுடன் ஒரே கொத்தாய்க் கொத்துவதுபோல், விஷயம் அகப்படும் வரையில் தியானஞ் செய்யும் வைராக்கிய முடையாரைப்போல் வெளியில் காட்டி, உள்ளில் விஷயத்தியானிகளாய், விஷயம் வாய்த்தவுடனே தாவும் செய்கையுடையார்.

காமிகளும், கோபிகளும், கொலைத்தொழிலுடையவரும், * எக. சண்டர்களும், அங்ஙனமே * அய. சடர்களும். ( )

ज्ञानलुप्ता न कर्तव्या महापापास्तथा प्रिये ।
एभ्यो भिन्नो गुरुः सेव्य एकभक्त्या विचार्य च ॥ २०३ ॥

பிரியமானவளே! ஞானமின்றியவர்களும், மகாபாபிகளுமாகிய இவர்களைக் குரவர்களாகக் கொள்ளலாகாது. இவர்களுக்கு வேருகிய குரவனே விசாரித்து * அக. ஏகபத்தியினால் சேவிக்கத்தக்கவனாவன். (உ௱௩)

शिष्यादन्यत्र देवेशि न वदेद्यस्य कस्यचित् ।
नराणां च फलप्राप्तौ भक्तिरेव हि कारणम् ॥ २०४ ॥

தெய்வநாயகி! சிஷ்பனுக் கன்னியமான எவனுக்கும் சொல்லலாகாது. நரர்கள் பயனை யடைவதற்கு நிச்சயமாகப் பத்தியே காரணம். (உ௱௪)

गूढो दृढश्च प्रीतश्च मौनेन सुसमाहितः ।
सकृत्कामगतो वापि पंचधा गुरुरीरितः ॥ २०५ ॥

---

* எக. குரூரமானவர்.

* அய. புறங்கூறுவோர்.

* அக. ஏகபத்தி=பிரதானபக்தி.

கூடமானவனேனும், திடமானவனேனும், பிரியப்படுபவனேனும், மௌனத்தாற் செவ்வையாய்ச் சமாதியடைந்தவனேனும், எப்போதாயினும் ஒருமுறை காமத்தை யடைந்தவனேனுமாகிய இவன் ஐவகைக் குரவனெனப்படுவன்.

सर्वं गुरुमुखाल्लब्धं सफलं पापनाशनम् ।
यद्यदात्महितं वस्तु तत्तद्द्रव्यं न वंचयेत् ॥ २०६ ॥

குருமுகமாக அடையப்பட்ட யாவும் பயனுள்ளனவும் பாவத்தை யொழிப்பனவுமாம். யாது யாது தனக்கு இதமான (நன்மையான) வஸ்துவோ அந்தந்தத் திரவியத்தை வஞ்சிக்கலாகாது. (உ௱௬)

गुरुदेवार्पणं वस्तु तेन तुष्टोऽस्मि सुव्रते ।
श्रीगुरोः पादुकां मुद्रां मूलमंत्रं च गोपयेत् ॥ २०७ ॥

நல்விரதமுடையவளே! குருதேவார்ப்பணமாகிய வஸ்து எதுவோ, அதனுல் யான் திருப்தியுள்ளவனுகின்றேன். ஸ்ரீகுருவின் பாதுகையாகிய முத்திரையையும் மூலமந்திரத்தையும் இரகஸியமாய் வைக்கவேண்டும். (உ௱௭)

नतास्मि ते नाथ पदारविन्दं बुद्धीन्द्रियप्राणमनोवचोभिः ।
यच्चिंत्यते भावित आत्मयुक्तौ मुमुक्षुभिः कर्ममयोपशांतये ॥ २०८ ॥

நாதனே! முமுக்ஷுக்களால் பாவிக்கப்படும் ஆத்ம யுக்தியில் கர்மஸ்வரூபத்தின் உபசாந்தியின்பொருட்டு எது சிந்திக்கப்படுகின்றதோ, அத்தன்மைய தமது பாதாரவிந்தத்தினைப் புத்தீந்திரியப்பிராணமனோவாக்குகளால் நமஸ்கரிப்பவளாயிருக்கின்றேன். (உ௱அ)

अनेन यद्भवेत्कार्यं तद्वदामि तव प्रिये ।
लोकोपकारकं देवि लौकिकं तु विवर्जयेत् ॥ २०९ ॥

பிரியமுள்ளவளே! இதனால் எந்தக்காரியமுண்டாகின்றதோ, அதனை யானுனக்குச் சொல்லுகிறேன். தேவி! இது உலகோபகாரமுள்ளதாம். இலௌகிகத்தை விட்டுவிடல்வேண்டும். (உ௱௯)

लौकिकाद्धर्मतो याति ज्ञानहीनो भवार्णवे ।
ज्ञानभावे च यत्सर्वं कर्म निष्कर्म शाम्यति ॥ २१० ॥

இலௌகிகதர்மத்தினால் ஞானஹீனனாய்ப் * அஉ. பவார்ணவத்திற் சேருகின்றனன். ஞானத்தன்மையில் சகல கர்மங்களும் நிஷ்கர்மமா யொழிகின்றன. (உ௱௰)

इमां तु भक्तिभावेन पठेन्वै श्रृणुयादपि ।
लिखित्वा यत्प्रदानेन तत्सर्वं फलमश्नुते ॥ २११ ॥

* அஉ. பிறவிக்கடல்.

இதனைப் பக்தியாகப் படிப்பதனாலும், கேட்பதனாலும், எழுதிக் கொடுப்பதனாலும், அவ்வெல்லாப் பயனையு மடைகிறான். (உகக)

गुरुगीतामिमां देवि हृदि नित्यं विभावय ।
महाव्याधिगतैर्दुःखैः सर्वदा प्रजपन्मुदा ॥ २१२ ॥

தேவியே! இதயத்தில் தினமும் இக்குருகீதையைப் பாவிப்பாயாக. மகாவியாதிகளிலுள்ளனவாகிய துக்கங்களோடும் இதனைச் சந்தோஷமாய் ஜபிக்கவேண்டும். (உகஉ)

गुरुगीताक्षरैकैकं मंत्रराजमिदं प्रिये ।
अन्ये च विविधा मंत्राः कलां नार्हन्ति षोडशीम् ॥ २१३ ॥

இக்குருகீதையின் எழுத்தொவ்வொன்றும் முதன்மை பெற்ற மந்திரமாம். பிரியமுள்ளவளே! மற்ற நானாவித மந்திரங்களெல்லாம் இதன் பதினாறில் ஒருபாகத்திற் கிணையாகா. (உகந)

अनंतफलमाप्नोति गुरुगीताजपेन तु ।
सर्वपापहरा देवि सर्वदारिद्र्यनाशिनी ॥ २१४ ॥

குருகீதையை ஜபித்தலால் அநந்த (அளவின்றிய) பயனை யடைகிறான். தேவி! அக்கீதை சகலபாபங்களையும் கெடுப்பதும், சகலதரித்திரங்களையும் நாசஞ்செய்வதுமாம். ()

अकालमृत्युहरा चैव सर्वसंकटनाशिनी ।
यक्षराक्षसभूतादिचोरव्याघ्रविघातिनी ॥ २१५ ॥

அகாலமிருத்தியுவைக் கெடுப்பதும், சகலவருத்தங்களையு மொழிப்பதும், இயக்கர், அரக்கர், பூதங்கள், திருடர், புலி முதலியவற்றைக் கொல்லுவதுமாம். (உகரு)

सर्वोपद्रवकुष्ठादिदुष्टदोषनिवारिणी ।
यत्फलं गुरुसान्निध्यात्तत्फलं पठनाद्भवेत् ॥ २१६ ॥

சகல உபத்திரவங்களும் குஷ்டமுதலியனவுமாகிய துஷ்டதோஷங்களைக் கெடுப்பதாயு மிருக்கின்றது. குரவன் சந்நிதியினால் எந்தப் பய னுண்டாகின்றதோ, அந்தப்பயன் படித்தலா லுண்டாகின்றது. (உகசா)

महाव्याधिहरा सर्वविभूतेः सिद्धिदा भवेत् ।
अथवा मोहने वश्ये स्वयमेव जपेत्सदा ॥ २१७ ॥

இக்கீதை முழுவதும் மகாவியாதியைக் கெடுப்பதாம். எல்லா விபூதியினது (ஐசுவரியத்தின்) சித்தியையும் தருவதாகின்றது. அல்லது * அநு. மோகனத்திலும் வசியத்திலும் தானேயே எப்போதும் ஜபிக்குக. (உகஎ)

---

* அநு. மோகனம் = மோகிக்கச் செய்தல்.

कुशदूर्वासने देवि ह्यासने शुभ्रकंबले ।
उपविश्य ततो देवि जपेदेकाग्रमानसः ॥ २१८ ॥

தேவி! குசம் (தர்ப்பை) அறுகு என்பவற்றாலாகிய ஆசனத்திலும், சுத்தமாகிய கம்பளாசனத்திலும் உட்கார்ந்து, தேவி! அதன்பின் ஏகாக்கிரமனதுடையவனாய் ஜபிக்கவேண்டும். (உகஅ)

शुक्लं सर्वत्र वै प्रोक्तं वश्ये रक्तासनं प्रिये ।
पद्मासने जपेन्नित्यं शांतिवश्यकरं परम् ॥ २१९ ॥

பிரியமுள்ளவளே! எல்லாக்காரியத்திலும் வெள்ளையாசனமும், வசியத்தில் சிவப்பாசனமும் சொல்லப்பட்டிருக்கின்றன. *அச. பதுமாசனத்தில் (உட்கார்ந்து) நித்தியமும் ஜபிக்கவேண்டும். அது சாந்திவசியங்களை யுண்டுபண்ணும் மேலான ஆசனமாம். (உகசு)

वस्त्रासने च दारिद्र्यं पाषाणे रोगसंभवः ।
मेदिन्यां दुःखमाप्नोति काष्ठे भवति निष्फलम् ॥ २२० ॥

வஸ்திராசனத்தில் தாரித்திரியமும், பாஷாணத்தில் (கல்லில்) ரோகசம்பவமும், தரையில் துக்கமு முண்டாகும். கட்டையில் நிஷ்பல மாகின்றது. (உஉ0)

---

* அச. பதுமாசனத்தின் இலக்ஷணத்தைத் தேவிகீதை, ஹடயோகப்பிரதீபிகை முதலியவற்றிற் காண்க.

कृष्णाजिने ज्ञानसिद्धिर्मोक्षश्रीर्व्याघ्रचर्मणि ।
कुशासने ज्ञानसिद्धिः सर्वसिद्धिस्तु कंबले ॥ २२१ ॥

கிருஷ்ணாஜினத்தில் (கருமான்றோலில்) ஞானசித்தியும், புலித்தோலில் மோக்ஷலக்ஷ்மியும், தர்ப்பாசனத்தில் ஞானசித்தியும், கம்பளத்தில் சர்வசித்தியு முண்டாம். (உஉக)

आग्नेयां कर्षणं चैव वायव्यां शत्रुनाशनम् ।
नैर्ऋत्यां दर्शनं चैव ईशान्यां ज्ञानमेव च ॥ २२२ ॥

* அரு. ஆக்கினேயத்தில் ஆகர்ஷணமும், * அசு. வாயுவில் சத்துருநாசனமும், * அஎ. நிருதியில் தரிசனமும், * அஅ. ஈசானியத்தில் ஞானமுமே யுண்டாம். (உஉஉ)

उदङ्मुखः शांतिजाप्ये वश्ये पूर्वमुखस्तथा ।
याम्ये तु मारणं प्रोक्तं पश्चिमे च धनागमः ॥ २२३ ॥

சாந்தியின் பொருட்டு வடக்குமுகமும், அப்படியே வசியத்தின் பொருட்டுக் கிழக்குமுகமும், மாரணத்தின் பொருட்டுத் தெற்குமுகமும், பணவரவின் பொருட்டு மேற்குமுகமும் ஜபித்தற் குரியனவாம். (உஉங)

---

* அரு. தென்கிழக்கு. * அசு. வடமேற்கு. * அஎ. தென்மேற்கு. * அஅ. வடகிழக்கு.

मोहनं सर्वभूतानां बन्धमोक्षकरं परम् ।
देवराज्ञां प्रियकरं राजानं वशमानयेत् ॥ २२४ ॥

இம்மந்திரம் சர்வபூதங்களையும் மோகிப்பதும், பந்த நீக்கத்தைத் தருவதும், மேலானதும், தேவராஜர்களின் பிரியத்தைச் செய்வதுமாம்; இராஜாக்களை வசமாக்குகின்றது.

मुखस्तंभकरं चैव गुणानां च विवर्धनम् ।
दुष्कर्मनाशनं चैव तथा सत्कर्मसिद्धिदम् ॥ २२५ ॥

வாயைக் கட்டுவதாயும், குணங்களை விருத்திசெய்வதாயும், துஷ்கருமங்களைக் கெடுப்பதாயும், அப்படியே சற்கருமசித்தியைத் தருவதாயு மிருக்கின்றது. (உஉரு)

असिद्धं साधयेत्कार्यं नवग्रहभयापहम् ।
दुःस्वप्ननाशनं चैव सुस्वप्नफलदायकम् ॥ २२६ ॥

சித்தியாத காரியத்தைச் சாதிக்கின்றது; நவக்கிரகபயத்தைக் கெடுப்பதாயும், கெட்ட சொப்பனங்களையொழிப்பதாயும், நல்ல சொப்பனபலனைத் தருவதாயு மிருக்கின்றது. (உஉசா)

मोहशान्तिकरञ्चैव बन्धमोक्षकरं परम् ।
स्वरूपज्ञाननिलयं गीताशास्त्रमिदं शिवे ॥ २२७ ॥

சிவையே! இக்கீதாசாஸ்திரமானது மோகத்தை நீக்குவதாயும், பந்தனங்களினின்று விடுவிப்பதாயும், (ஆத்ம) சுவரூபஞானத்தி லிருப்பிடமாயு மிருக்கின்றது. (உஉஎ)

यं यं चिन्तयते कामं तं तं प्राप्नोति निश्चयम् ।
नित्यं सौभाग्यदं पुण्यं तापत्रयकुलापहम् ॥ २२८ ॥

நிச்சயமாகவே, எந்தெந்த இச்சையைச் சிந்திக்கிறானோ அததனை அடைகின்றான். எப்பொழுதும் (இக்கீதாசாஸ்திரம்) சௌபாக்கியத்தைத் தருகிறதா யிருக்கிறது; புண்ணியகாரகமா யிருக்கிறது; மூவித தாபங்களையும் நாசப்படுத்துவதா யிருக்கிறது. (உஉஅ)

सर्वशांतिकरं नित्यं तथा वन्ध्यासुपुत्रदम् ।
अवैधव्यकरं स्त्रीणां सौभाग्यस्य विवर्द्धनम् ॥ २२९ ॥

நித்தியம் சகல சாந்திகளையும் செய்வதாயும், அப்படியே மலடிக்கு நற்புத்திரனைத் தருவதாயும், ஸ்திரீகளுக்கு சுமங்கிலித்தன்மையைத் தருவதாயும், சௌபாக்கியத்தை விருத்திசெய்வதாயு மிருக்கின்றது. (உஉகூ)

आयुरारोग्यमैश्वर्यं पुत्रपौत्रप्रवर्धनम् ।
निष्कामजापी विधवा पठेन्मोक्षमवाप्नुयात् ॥ २३० ॥

ஆயுள் ஆரோக்கியம் ஐசுவரியம் புத்திரபௌத்திரர்களென்பவற்றை விருத்திசெய்வதாயு மிருக்கின்றது. நிஷ்காமமாய் ஜபிக்கும் விதவை படித்தால் மோக்ஷமடைவாள். (உ௩௰)

अवैधव्यं सकामा तु लभते चान्यजन्मनि ।
सर्वदुःखमयं विघ्नं नाशयेत्तापहारकम् ॥ २३१ ॥

அவள் காமமுள்ளவளாயின் மறுபிறப்பில் சுமங்கிலித்தன்மை யடைகின்றாள். துக்கமயமான விக்கினம் எல்லாவற்றையும் நாசஞ்செய்வதாயும், தாபங்களைக் கெடுப்பதாயு மிருக்கின்றது. (உ௩௧)

सर्वपापप्रशमनं धर्मकामार्थमोक्षदम् ।
यं यं चिंतयते कामं तं तं प्राप्नोति निश्चितम् ॥ २३२ ॥

சகலபாவங்களையும் ஒழிப்பதும், தர்மகாமார்த்தமோக்ஷங்களைத் தருவதுமாம். எந்தெந்தக் காமத்தைச் சிந்திக்கின்றானோ, அததனை நிச்சயமாக அடைகின்றான். ()

काम्यानां कामधेनुर्वै कल्पिते कल्पपादपः ।
चिंतामणिश्चिन्तितस्य सर्वमंगलकारकम् ॥ २३३ ॥

* அசு. காமியங்களுக்குக் காமதேனுவாயும், கற்பிதந்

※ அசு. விரும்பியவற்றிற்கு.

களுக்குக் கற்பகத்தருவாயும், சிந்திப்பவற்றிற்குச் சிந்தாமணியாயும், சகல மங்களத்தையு முண்டுபண்ணுவதாயுமிருக்கின்றது. (௨௩௩)

लिखित्वा पूजयेद्यस्तु मोक्षश्रियमवाप्नुयात् ।
गुरुभक्तिर्विशेषेण जायते हृदि सर्वदा ॥ २३४ ॥

எவன் இதனை எழுதிப் பூஜிக்கின்றானோ, அவன் மோக்ஷலக்ஷ்மியை யடைகிறான். அவன் உள்ளத்தில் எப்போதும் குருபக்தி விசேஷமாக வுண்டாகின்றது. (௨௩௪)

जपन्ति शाक्ताः सौराश्च गाणापत्याश्च वैष्णवाः ।
शैवाः पाशुपताः सर्वे सत्यं सत्यं न संशयः ॥ २३५ ॥

சாக்தர்களும், * கூ0. சௌரர்களும், காணபத்தியரும், வைஷ்ணவரும், சைவரும், பாசுபதருமாகிய எல்லோரும் இதனை ஜபிக்கின்றார்கள். சத்தியம்; சத்தியம்; சமுசயமில்லை. (௨௩௫)

॥ इति श्रीस्कान्दोत्तरखण्डे उमामहेश्वरसंवादे
श्रीगुरुगीतायां द्वितीयोऽध्यायः ॥

ஸ்ரீ குருகீதை இரண்டாம் அத்தியாயம்.

முடிந்தது.

---

* கூ0. சூரியவுபாஸகர்.

# ஸ்ரீ குருகீதை.

## ॥ अथ तृतीयोऽध्यायः ॥

## மூன்றும் அத்தியாயம்.

अथ काम्यजपस्थानं कथयामि वरानने ।
सागरान्ते सरित्तीरे तीर्थे हरिहरालये ॥ २३६ ॥

*இனிக் காமியமாய் ஜபிக்கு மிடத்தைச் சொல்லுகின்றேன். பார்வதி! கடலோரத்திலும், நதிக்கரையிலும், தீர்த்தங்களிலும், விஷ்ணுசிவாலயங்களிலும், (உ௩௬)*

शक्तिदेवालये गोष्ठे सर्वदेवालये शुभे ।
वटस्य धात्र्या मूले वा मठे वृन्दावने तथा ॥ २३७ ॥

*சக்திதேவாலயங்களிலும், மாட்டுக்கொட்டகையிலும், சுபமாகிய சர்வதேவாலயங்களிலும், ஆலவிருக்ஷத்தின் அடியிலும், நெல்லிவிருக்ஷத்தின் கீழும், மடங்களிலும், பிருந்தாவனங்களிலும், (உ௩௭)*

पवित्रे निर्मले देशे नित्यानुष्ठानतोपि वा ।
निर्वेदनेन मौनेन जपमेतत् समारभेत् ॥ २३८ ॥

அப்படியே பவித்திரமும் நிர்மலமுமாகிய இடத்தில் நித்தியாநுஷ்டானஞ் செய்பவனாய்த் துன்பமின்றி மௌனமாயிருந்து, இந்த ஜபத்தினை ஆரம்பிக்கக்கடவன். (உ௩அ)

जाप्येन जयमाप्नोति जपसिद्धिं फलं तथा ।
हीनं कर्म त्यजेत्सर्वं गर्हितस्थानमेव च ॥ २३९ ॥

ஜபித்தலால் ஜயத்தை யடைகின்றான். ஜபஸித்தியையும் பயனையு மடைகின்றான். ஈனகர்மமும், நிந்திக்கத்தக்க ஸ்தானமுமாகிய எல்லாவற்றையுமே விடவேண்டும். (உ௩௯)

स्मशाने विल्वमूले वा वटमूलांतिके तथा ।
सिध्यन्ति कानके मूले चूतवृक्षस्य सन्निधौ ॥ २४० ॥

ஸ்மசானத்திலும், வில்வவிருக்ஷத்தினடியிலும், ஆலவிருக்ஷத்தின் கீழும், அப்படியே * கனக, ஜாபாலவிருக்ஷத்தின் கீழும், மாவிருக்ஷத்தினடியிலும் ஜபித்தலால் சித்தியை யடைகின்றான். (உ௪0)

पीतासनं मोहने तु ह्यसितं चाभिचारिके ।
ज्ञेयं शुक्लं च शांत्यर्थं वश्ये रक्तं प्रकीर्तितम् ॥ २४१ ॥

மோகனத்தில் மஞ்சள் ஆசனமும், மாரணாதி அபிசார

* கனக. ஜாபாலம் = காட்டுமணக்கு அல்லது நேர்வாளம்.

கர்மத்தில் கருமையான ஆசனமும், சாந்தியின் பொருட்டு வெண்மையான ஆசனமும் அறியத்தக்கனவாம். வசியத்தில் இரக்தநிறமான ஆசனம் சொல்லப்படுகின்றது. (உசக)

जपं हीनासनं कुर्वन् हीनकर्माफलप्रदम् ।
गुरुगीतां प्रयाणे वा संग्रामे रिपुसंकटे ॥ २४२ ॥

ஆசனமின்றிச் செய்வதனால் ஜபம் ஈனகர்மமுடையதாய்ப் பயனைத் தருவதாகாது. குருகீதையைப் பிரயாணத்திலாவது யுத்தகளத்திற் சத்துருவாற் சங்கடம் நேரிட்டகாலத்திலாவது, (உசஉ)

जपन् जयमवाप्नोति मरणे मुक्तिदायिका ।
सर्वकर्माणि सिध्यन्ति गुरुपुत्रे न संशयः ॥ २४३ ॥

ஜபித்தலினால் ஜயத்தை யடைகின்றான்; மரணத்தில் முத்தியைத் தருவதா யிருக்கின்றது. சர்வ கர்மங்களும் குருபுத்திரனை யுள்ளவனுக்கே சித்திக்கும்; சமுசயமில்லை. ()

गुरुमंत्रो मुखे यस्य तस्य सिध्यन्ति नान्यथा ।
दीक्षया सर्वकर्माणि सिध्यन्ति गुरुपुत्रके ॥ २४४ ॥

குருமந்திரம் எவன் முகத்தி லிருக்கின்றதோ, அவனுக்கு யாவுஞ் சித்திக்கின்றன; வேறுவிதத்தாற் சித்திக்

கிறதில்லை. குருபுத்திரனுக்குத் தீக்ஷையினால் சகல கர்மங்களும் சித்திக்கின்றன. (உ௪௪)

भवमूलविनाशाय चाष्टपाशनिवृत्तये ।
गरुगीतांभसि स्नानं तत्त्वज्ञः कुरुते सदा ॥ २४५ ॥

சம்ஸாரகாரணம் நாசமாதற்கும், அஷ்டபாசங்கள் ஒழிவதற்கும் குருகீதையாகிய ஜலத்தில் தத்துவஞானி எப்போதும் ஸ்நானஞ் செய்கின்றான். (உ௪௫)

स एव सद्गुरुः साक्षात् सदसद्ब्रह्मवित्तमः ।
तस्य स्थानानि सर्वाणि पवित्राणि न संशयः ॥ २४६ ॥

சத்தசத்துக்களைப் பிரித்தறியும் பிரஹ்மஞானசிரேஷ்டராகிய அவரே சாக்ஷாத் சற்குரு அவரது ஸ்தானங்கள் யாவும் பவித்திரமானவைகளாம்; சம்சய மில்லை. (உ௪௬)

सर्वशुद्धः पवित्रोऽसौ स्वभावाद्यत्र तिष्ठति ।
तत्र देवगणाः सर्वे क्षेत्रपीटे चरन्ति च ॥ २४७ ॥

சுபாவமாக எங்கு அவர் உட்காருகின்றனரோ, அது சர்வசுத்தமும் பவித்திரமுமாம். அந்த க்ஷேத்திரபீடத்தில் சகல தேவகணங்களும் சரிக்கின்றார்கள். (உ௪௭)

आसनस्थाः शयाना वा गच्छंतस्तिष्ठंतोपि वा।
अश्वारूढा गजारूढाः सुषुप्ता जाग्रतोपि वा॥ २४८॥

शुचिर्भूता ज्ञानवंतो गुरुगीतां जपन्ति ये।
तेषां दर्शनसंस्पर्शात् * पुनर्जन्म न विद्यते॥ २४९॥

ஆசனத்திலிருப்பவரும், சயனிப்பவரும், நடப்பவரும், நிற்பவரும், குதிரையிலேறியவரும், யானையிலேறியவரும், சுழுத்தரும், விழிப்புடையோரும், சுத்தமானவரும், ஞானமுடையோருமாய்க் குருகீதையினை எவர்கள் ஜபிக்கின்றார்களோ, அவர்களது தரிசனஸ்பரிசனத்தால் மறுபிறப்புண்டாகிறதில்லை. (௨௪௮-௨௪௯)

समुद्रे वै यथा तोयं क्षीरे क्षीरं जले जलम्।
भिन्ने कुंभे यथाकाशं तथात्मा परमात्मनि॥ २५०॥

எப்படிச் சமுத்திரத்தில் ஜலமும், பாலிற் பாலும், ஜலத்தில் ஜலமும், குடமுடைந்தபோது ஆகாயமும் அபேதமாமோ, அப்படியே பரமாத்மாவினிடத்தில் ஆத்மா அபேதமாம். (௨௫௦)

---

* दिव्यज्ञानं प्रजायते = தரிசனபரிசனத்தால் திவ்வியஞானமுண்டாகிறது என்னும் பாடம்.

तथैव ज्ञानवान् जीवः परमात्मनि सर्वदा ।
ऐक्येन रमते ज्ञानी यत्र कुत्र दिवानिशम् ॥ २५१ ॥

ஞானமுடைய ஜீவன் பரமாத்மாவினிடத்து எப்போதும் அவ்வாறே யாகின்றான். ஞானி எவ்வெவ்விடத்தும் இரவும் பகலும் ஐக்கியத்தினால் இரமிக்கின்றான். (உருக)

एवंविधो महायुक्तो सर्वत्र वर्तते सदा ।
तस्मात्सर्वप्रकारेण गुरुभक्ति समाचरेत् ॥ २५२ ॥

இத்தன்மைய மகாயோகமுடையோன் எங்கும் எப்போது மிருக்கின்றான். ஆதலால் எல்லாவிதத்தாலும் குருபக்தியைச் செவ்வையா யாசரிக்கவேண்டும். (உருஉ)

गुरुसंतोषणादेव मुक्तो भवति पार्वति ।
अणिमादिषु भोक्तृत्वं कृपया देवि जायते ॥ २५३ ॥

பார்வதி! குரவனைச் சந்தோஷிப்பித்தலாலே முக்தனாகின்றான். தேவி! அவரது கிருபையினால் அணிமாதிகளில் * கூஉ. போக்திருத்தன்மை யுண்டாகின்றது. (உருங)

साम्येन रमते ज्ञानी दिवा वा यदि वा निशि ।
एवंविधो महामौनी त्रैलोक्यसमतां व्रजेत् ॥ २५४ ॥

---

* கூஉ. புசிக்குந்தன்மை.

இரவிலும் பகலிலும் ஞானி சமத்தன்மையோடு இரு மிக்கின்றான். இத்தன்மையனான மகாமௌனி மூவுலக சமத்தன்மையையு மடைகின்றான். (உருச)

अथ संसारिणः सर्वे गुरुगीताजपेन तु ।
सर्वान् कामांस्तु भुञ्जन्ति त्रिसत्यं मम भाषितम् ॥ २५५ ॥

இனிச் சம்சாரிகள் யாவரும் குருகீதையை ஜபித்த லால் சகல காமங்களையும் புசிக்கின்றார்கள். முச்சத்தியம் என்றுற் சொல்லப்பட்டது. (உருரு)

सत्यं सत्यं पुनः सत्यं धर्मसारं मयोदितम् ।
गुरुगीतासमं स्तोत्रं नास्ति तत्त्वं गुरोः परम् ॥ २५६ ॥

சத்தியம், சத்தியம், மறுபடியும் சத்தியம். தர்மசார மென்றுற் சொல்லப்பட்டது. குருகீதைக்குச் சமமான ஸ்தோத்திரமும், குருவிற்கு மேலான தத்துவமு மில்லை. ()

गुरुर्देवो गुरुर्धर्मो गुरौ निष्ठा परं तपः ।
गुरोः परतरं नास्ति त्रिवारं कथयामि ते ॥ २५७ ॥

குருவே தெய்வம்; குருவே தர்மம். குருவினிடத்து நிஷ்டை மேலான தவம். குருவிற்கு மேலான தில்லை. இதனை மும்முறை உனக்குச் சொல்லுகிறேன். (உருஎ)

धन्या माता पिता धन्यो गोत्रं धन्यं ** कुलोद्भवः ।
धन्या च वसुधा देवि यत्र स्याद्गुरुभक्तता ॥ २५८ ॥

தேவி! குருபக்தியுடைமை எந்த விடத்தி லிருக்கின்றதோ, அந்தப் பூமியும் தன்னியமாம். அவன் தாயும் * கூந. தன்னியை; தந்தையும் தன்னியன்; கோத்திரமும் தன்னியம்; குலத்திற் றோன்றியவனும் தன்னியன். (உருஅ)

आकल्पजन्मकोटीनां यज्ञव्रततपःक्रियाः ।
ताः सर्वाः सफला देवि गुरुसंतोषमात्रतः ॥ २५९ ॥

தேவி! குரவன்சந்தோஷமாத்திரத்தால் கற்பபரியந்தமான கோடிப்பிறப்புகளின் யாகம் விரதம் தவம் கிரியையென்னும் அவையாவும் பயனுள்ளன வாகின்றன. (உருகூ)

शरीरमिंद्रियं प्राणमर्थं स्वजनबंधुता ।
मातृकुलं पितृकुलं गुरुरेव न संशयः ॥ २६० ॥

ஆதலால் சரீரம், இந்திரியம், பிராணன், அர்த்தம், தம்மவர், பந்துக்கள், தாயின் குலம், தந்தையின் குலமென்பவை குரவனே; சம்சய மில்லை. (உகூ0)

---

** तथा शिवे = அவ்வாறே சிவையே! என்றும் பாடம்.
* கூந. செல்வமுடையவள்.

मंदभाग्या ह्यशक्ताश्च ये जना नानुमन्वते ।
गुरुसेवासु विमुखाः पच्यन्ते नरकेऽशुचौ ॥ २६१ ॥

எவர்கள் மந்தபாக்கிய முடையோராய், அசக்தர்களாய், * கூச. விமுகராய்க் குருசேவையைப் பின்பற்றிச் செல்லுவதில்லையோ, அவர்கள் அசுசியான நரகத்தில் வேகின்றார்கள். (உசுக)

विद्या धनं बलं चैव तेषां भाग्यं निरर्थकम् ।
येषां गुरुकृपा नास्ति अधो गच्छंति पार्वति ॥ २६२ ॥
ब्रह्मा विष्णुश्च रुद्रश्च देवताश्च पितृकिन्नराः ।
सिद्धचारणयक्षाश्च अन्ये च मुनयो जनाः ॥ २६३ ॥

பார்வதி! எவர்களுக்குக் குரவன் கிருபையில்லையோ, அத்தன்மைய பிரஹ்மா விஷ்ணு உருத்திரன் தேவர்கள் பிதுர்க்கள் கின்னரர் சித்தர் சாரணர் இயக்கர் முனிவர் ஏனைய ஜனங்கள் என்பவர்களது வித்தை தனம் வலிமை என்னும் பாக்கியம் பயனற்றதாம். அவர்கள் கீழ்ச் செல்லுகின்றார்கள். (உசுஉ-உசுந)

गुरुभावः परं तीर्थमन्यतीर्थं निरर्थकम् ।
सर्वतीर्थमयं देवि श्रीगुरोश्चरणांबुजम् ॥ २६४ ॥

---

* கூச. விலகியபார்வை யுடையோராய்.

* கூரு. குருபாவம் மேலான தீர்த்தமாம். மற்றைத் தீர்த்தங்கள் பயனற்றனவாம். தேவி! ஸ்ரீ குருவின் சரணாரவிந்தம் சகல தீர்த்தவடிவமாம். (உகூசு)

कन्याभोगरता मंदाः स्वकांतायाः पराङ्मुखाः ।
अतः परं मया देवि कथितन्न मम प्रिये ॥ २६५ ॥

ஸ்திரீபோகரதர்களாகிய மந்தர்கள் தமது ஸ்திரீயினிடத்துப் பராமுகமாயிருப்பர். ஆதலால் எனது பிரியமுள்ள தேவி! (இந்த) மேலான பொருள் (அவர்கள் பொருட்டு) என்னால் சொல்லப்பட்டதன்று. (உகூரு)

इदं रहस्यमस्पष्टं वक्तव्यं च वरानने ।
सुगोप्यं च तवाग्रे तु ममात्मप्रीतये सति ॥ २६६ ॥

இஃது இரகசியம்; வெளிப்படையின்றியது. பார்வதி! ஸதியே! உன்னிடத்தில் எனது ஆத்மப்பிரியத்தின்பொருட்டுச் சொல்லத்தக்கதாம். இதனைச் செவ்வையாய் மறைத்து வைக்கவேண்டும். (உகூசா)

स्वामिमुख्यगणेशाद्यान्वैष्णवादींश्च पार्वति ।
न वक्तव्यं महामाये पादस्पर्शं कुरुष्व मे ॥ २६७ ॥

---

* கூரு. குருபக்தி.

கணேசன்முதலியோரை முக்கிய தெய்வமாக வுடைய காணாபத்தியர் முதலியோருக்கும், வைஷ்ணவர்முதலியோருக்கும் பார்வதி! இதனைச் சொல்லலாகாது. மகாமாயையே! என் பாதத்தைத் தொடுவாயாக. (உ௬எ)

अभक्ते वंचके धूर्ते पाषंडे नास्तिकादिषु ।
मनसापि न वक्तव्या गुरुगीता कदाचन ॥ २६८ ॥

பக்தியில்லாதவரிடத்தும், வஞ்சகரிடத்தும், * துர்த்தரிடத்தும், பாஷண்டரிடத்தும், நாஸ்திகர்முதலியோரிடத்தும் குருகீதை ஒருநாளும் மனதினாலும் சொல்லத்தக்க தன்று. (உ௬அ)

गुरवो बहवः सन्ति शिष्यवित्तापहारकाः ।
तमेकं दुर्लभं मन्ये शिष्यहृत्तापहारकम् ॥ २६९ ॥

சிஷ்யனது வித்தத்தை (பொருளை) யபகரிக்கும் குரவர் அநேகருளர். சிஷ்யனது இருதயதாபத்தைக் கெடுக்கும் அக்குரவர் ஒருவரையே பெறுதற்கரியவர் என்று மதிக்கின்றேன். (உ௬௯)

चातुर्यवान् विवेकी च अध्यात्मज्ञानवान् शुचिः ।
मानसं निर्मलं यस्य गुरुत्वं तस्य शोभते ॥ २७० ॥

---

* ௬௬. துர்த்தர் = துஷ்டர்.

சாதுரியமுடையோனுய், விவேகியாய், அத்தியாத்ம ஞானமுடையோனுய், சுசியாய், எவனுடைய் மனது நிர்மல மாயிருக்கின்றதோ, அவனுக்குக் குருத்துவம் சோபிக்கின் றது. (உஎ௦)

गुरवो निर्मलाः शांताः साधवो मितभाषणः ।
कामक्रोधविनिर्मुक्ताः सदाचारा जितेंद्रियाः ॥ २७१ ॥

நிர்மலராயும், சாந்தராயும், சாதுக்களாயும், மிதமான வார்த்தையுடையோராயும், காமக்குரோதங்களினின்று விடு பட்டவராயும், நல்லொழுக்கமுடையோராயும், இந்திரிய ஜயமுடையோராயு முள்ளோர் குரவராவர். (உஎக)

सूचकादिप्रभेदेन गुरवो बहुधा स्मृताः ।
स्वयं सम्यक्परीक्ष्याथ तत्त्वनिष्ठं भजेत्सुधीः ॥ २७२ ॥

ஸூசகர் முதலிய பேதங்களினுல் குருக்கள் பலவகைப் படுகிருர்கள். ஆதலின் தான் நேராய் நன்ருகப் பரிசோ தித்துப் புத்திசாலியானவன் தத்துவநிஷ்டனை அடைய வேண்டும். (உஎஉ)

वर्णजालमिदं तद्वद्बाह्यशास्त्रं तु लौकिकम् ।
यस्मिन्देवि समभ्यस्तं स गुरुः सूचकः स्मृतः ॥ २७३ ॥

தேவி! எவனிடத்தில் இவ்வர்ணக்கூட்ட (அக்ஷரசமூக)மும், அதுபோல இலௌகிகமான பாகிய சாஸ்திரங்களும் செவ்வையாய் அப்பியசிக்கப்பட்டனவோ, அந்தக்குரு சூசகன் எனப்படுவன். (உஎ௩)

वर्णाश्रमोचितां विद्यां धर्माधर्मविधायिनीम् ।
प्रवक्तारं गुरुं विद्धि वाचकं त्विति पार्वति ॥ २७४ ॥

பார்வதி! வர்ணாசிரமங்களுக்குரியதும் தர்மாதர்மங்களை விவேசநஞ்செய்வதுமான வித்தையைக் கற்றுக்கொடுக்கும் குருவை வாசகன் என்றறிவாயாக. (உஎச)

पंचाक्षर्यादिमन्त्राणामुपदेष्टा तु पार्वति ।
स गुरुर्बोधको भूयादुभयोरयमुत्तमः ॥ २७५ ॥

பார்வதி! பஞ்சாக்ஷரமுதலிய மந்திரங்களை உபதேசிக்கிறவன் போதகன் எனப்படுகிறான். இருவருள் இவன் மேலானவன். (உஎரு)

मोहमारणवश्यादि तुच्छमन्त्रोपदेशिनम् ।
निषिद्धगुरुरित्याहुः पण्डितास्तत्त्वदर्शिनः ॥ २७६ ॥

மோஹனம், மாரணம், வசிய முதலிய துச்சமான (கெட்ட) மந்திரங்களை உபதேசிக்கிறவனை நிஷித்தகுருவென்று தத்துவஞானிகளான பண்டிதர் கூறுகிறார்கள். ()

अनित्यमिति निर्दिश्य संसारं सङ्कटालयम् ।
वैराग्यपदर्शी यः स गुरुर्विहितः प्रिये ॥ २७७ ॥

பிரியையே! ஸங்கடங்களுக்கிருப்பிடமான சம்சாரத்தை அநித்தியம் (அழிவது) என்று காட்டி, வைராக்கிய பதத்தைக் காட்டுகிற குரு எவனோ, அவன் விஹிதன் எனப் படுகிறான். (உஎஎ)

तत्त्वमस्यादिवाक्यानामुपदेष्टा तु पार्वति ।
कारणाख्यो गुरुः प्रोक्तो भवरोगनिवारकः ॥ २७८ ॥

பார்வதி! தத்துவமஸிமுதலிய வாக்கியங்களை உபதேசிக்கிறவர் பவரோகத்தை நிவாரணம் செய்பவரான காரண மென்னும் குரு வென்று சொல்லப்படுகின்றார். ()

सर्वसन्देहसन्दोहनिर्मूलनविचक्षणः ।
जन्ममृत्युभयघ्नो यः स गुरुः परमो मतः ॥ २७९ ॥

சந்தேகங்களெல்லாவற்றையும் அடியோடு நிவிருத்தி செய்வதில் வல்லவரும், ஜநநமரணபயத்தை விலக்குகிறவரும் எவரோ அவரே பரமகுருவாக எண்ணப்படுகிறார். (உஎகூ)

बहुजन्मकृतात्पुण्याल्लभ्यतेऽसौ महागुरुः ।
लब्ध्वाऽमुं न पुनर्याति शिष्यः संसारबन्धनम् ॥ २८० ॥

அநேக ஜந்மங்களிற் செய்த புண்ணியத்தினால் இவ்வித மான மகாகுரு கிடைக்கிறார். சிஷியனானவன் இக்குரு வை அடைந்தபின் மறுபடியும் ஸம்ஸாரபந்தங்களை யடை கிறதில்லை. (உஅ0)

एवं बहुविधा लोके गुरवः सन्ति पार्वति ।
तेषु सर्वप्रयत्नेन सेव्यो हि परमो गुरुः ॥ २८१ ॥

பார்வதி! இப்படி உலகத்தில் குருக்கள் பலவிதமான வர்களா யிருக்கிறார்கள். அவர்களுள் முழுப்பிரயாசையுடன் பரமகுருவே ஸேவிக்கத்தகுந்தவர். (உஅக)

निषिद्धगुरुशिष्यस्तु दुष्टसङ्कल्पदूषितः ।
ब्रह्मप्रलयपर्यन्तं न पुनर्याति मर्त्यताम् ॥ २८२ ॥

நிஷித்தகுருவினுடைய சிஷ்யனே துஷ்டமான ஸங் கல்பங்களினால் தூஷிக்கப்பட்டவனாய், பிரஹ்மப்பிரளயம் வரையிலும் கூட மறுபடியும் மானிடஜந்மத்தை யடைகிற தில்லை. (உஅஉ)

एवं श्रुत्वा महादेवि महादेववचस्तथा ।
अत्यन्तविह्वलमना शङ्करं परिपृच्छति ॥ २८३ ॥

மஹாதேவியானவள் இவ்விதமாக மகாதேவருடைய

வார்த்தையைக் கேட்டு, மிகவும் துக்கமுற்ற மனதுள்ளவளாய்ச் சங்கரனைக் கேட்கின்றாள். (உ அங)

पार्वत्युवाच ॥

नमस्ते देवदेवात्र श्रोतव्यं किञ्चिदस्ति मे ।
श्रुत्वा त्वद्वाक्यमधुना भृशं स्याद्विह्वलं मनः ॥ २८४ ॥

பார்வதி சொல்லலாயினாள்:—மகாதேவரே! நமஸ்காரம். இங்கு (தங்களிடத்திலிருந்து) எனக்குத் தெரிந்து கொள்ளவேண்டியது கொஞ்ச மிருக்கிறது. தங்களுடைய வார்த்தையைக் கேட்டு, இப்போது அடிக்கடி என்மனது கலங்குவதாகின்றது. (உ அச)

स्वयं मूढा मृत्युभीताः सुकृताद्विरतिंगताः ।
दैवान्निषिद्धगुरुगा यदि तेषान्तु का गतिः ॥ २८५ ॥

இயல்பாக மூடர்களும், மரணபயங்கொண்டவர்களும், நற்காரியங்களை (புண்ணியத்தை)ச் செய்யாதவர்களுமான ஜனங்கள் தெய்வகதியால் நிஷித்தகுருவை யடைவார்களாயின், அவர்களுடைய கதி யாது? (உ அரு)

श्रीमहादेव उवाच ॥

शृणु तत्त्वमिदन्देवि यदा स्याद्विरतो नरः ।
तदाऽसावधिकारीति प्रोच्यते श्रुतिमस्तकैः ॥ २८६ ॥

ஸ்ரீ மகாதேவர் சொல்லலாயினார்:—தேவி! இந்தத் தத்துவத்தைச் சொல்லுகிறேன் கேள், மனுஷியனானவனெப்பொழுது விரக்தனாகிறானோ, அப்போது அவன் சுருதிசிரசுகளால் அதிகாரி யென்று சொல்லப்படுகிறான். (உஅசு)

अखण्डैकरसं ब्रह्म नित्यमुक्तं निरामयम् ।
स्वस्मिन्संदर्शितं येन स भवेदस्य देशिकः ॥ २८७ ॥

அகண்டமான ஒரே ரஸத்தையுடையதும், நித்தியமுக்தமும், துன்பமற்றதுமான பிரஹ்மமானது தன்னில் எவரால் செவ்வையாய்க் காட்டப்பட்டதோ, அவர் இவனு (அதிகாரி)க்குத் தேசிகர் (குரு) ஆவார். (உஅஎ)

जलानां सागरो राजा यथा भवति पार्वति ।
गुरूणां तत्र सर्वेषां राजायं परमो गुरुः ॥ २८८ ॥

ஜலங்களுக்கெல்லாம் எப்படி சமுத்திரம் ராஜாவோ, அப்படியே பார்வதி! எல்லாவிதமான குருக்களுக்கும் இந்தப் பரமகுருவானவர் ராஜனாகிறார். (உஅஅ)

मोहादिरहितश्शान्तो नित्यतृप्तो निराश्रयः ।
तृणीकृतब्रह्मविष्णुवैभवः परमो गुरुः ॥ २८९ ॥

(எவர்) மோகமுதலியவையற்றவரோ, சாந்தியுள்ளவரோ, எப்போதும் திருப்தியடைந்தவரோ, (வேறொன்

றையும்) ஆசிரயிக்காதவரோ, பிரஹ்மவிஷ்ணுக்களின் செல்வத்தையும் துரும்பாய் நினைக்கிறவரோ (அவரே) பரமகுரு (ஆவார்). (உஅகூ)

सर्वकालविदेशेषु स्वतन्त्रो निश्चलस्सुखी ।
अखण्डैकरसस्वादतृप्तो हि परमो गुरुः ॥ २९० ॥

எல்லாக்காலத்திலும், தேசத்திலும், சுவதந்திரரும், அசைவற்றவரும், சுகமுள்ளவரும், அகண்டமான ஒரே (பிரஹ்ம) ரஸத்தின் ருசியினல் திருப்தியடைந்தவரும் தான் பரமகுரு. (உகூO)

द्वैताद्वैतविनिर्मुक्तः स्वानुभूतिप्रकाशवान् ।
अज्ञानांधतमश्छेत्ता सर्वज्ञः परमो गुरुः ॥ २९१ ॥

த்வைதாத்வைதங்களை விட்டவரும், தன்னனுபவ (சுவரூபானுபவ)ப்பிரகாசத்தை யுடையவரும், அஞ்ஞானம் என்னும் பெருமிருளைப் போக்குகிறவருமான சர்வஞ்ஞரே பரமகுரு. (உகூக)

यस्य दर्शनमात्रेण मनसः स्यात्प्रसन्नता ।
स्वयं भूयात्धृतिश्शान्तिः स भवेत्परमो गुरुः ॥ २९२ ॥

எவரைப் பார்த்தமாத்திரத்தில் மனதிற்குத் தானாக

வே சந்தோஷமும், தைரியமும், சாந்தியும் உண்டாகிறதோ, அவர் தான் பரமகுருவாவர். (௨௯௨)

सिद्धिजालं समालोक्य योगीनां मन्त्रवादिनाम् ।
तुच्छाकारमनोवृत्तिर्यस्यासौ परमो गुरुः ॥ २९३ ॥

யோகிகளுடையனவும், மந்திரவாதிகளுடையனவுமான சித்திகளைக் கண்டு, எவருடைய மநநிகழ்ச்சியானது (அவைகளைத்) துச்சவடிவாகக் கருதுகிறதோ, அவர் பரமகுருவாவர். (௨௯௩)

स्वशरीरं शवं पश्यन् तथा स्वात्मानमद्वयम् ।
यः स्त्रीकनकमोहघ्नः स भवेत्परमो गुरुः ॥ २९४ ॥

எவர் தன்தேகத்தைப் பிணமாகவும், தன்னாத்மாவை அத்வயமாகவும் பார்க்கிறாரோ, ஸ்திரீ தங்கமென்பவற்றின் மோகங்களை வென்றவரோ, அவர் பரமகுருவாவர். ()

मौनी वाग्मीति तत्त्वज्ञो द्विधा भूच्छृणु पार्वति ।
न कश्चिन्मौनिनां लोभो लोकेस्मिन्भवति प्रिये ॥ २९५ ॥

பார்வதி! பிரியையே! கேள். * தத்வஜ்ஞன். மௌநி என்றும்

* தத்வஜ்ஞன். மௌனி=மனனஸ்வபாவத்தால் பேசாதவன். வாக்மி=ஸ்வரூபஸ்திதியில் நிற்கினும், பரோபகாரார்த்தமாய்ப் பேசுமியல்புடையான்.

வாக்மீ என்றும் தத்துவஞானிக ளிருவகைப்படுகிறார்கள். (அவர்களுள்) மௌநிகளுக்கு எவ்விதமான லோபமும் உண்டாகிறதில்லை. (உ௯௫)

वाग्मी तूत्कटसंसारसागरोत्तारणक्षमः ।
यतोसौ संशयच्छेत्ता शास्त्रयुक्त्यनुभूतिभिः ॥ २९६ ॥

வாக்மீயானவனே கொடிய ஸம்ஸாரமான கடலைக்கடத்துவிக்க வல்லவன். ஏனெனின், இவன் சாஸ்திரம், யுக்தி, அநுபவம் ஆகிய இவைகளைக் கொண்டு சமுசயங்களைச் சேதிக்கிறவனா யிருக்கிறான். (உ௯௬)

गुरुनामजपाद्देवि बहुजन्मार्जितान्यपि ।
पापानि विलयं यान्ति नास्ति सन्देहमण्वपि ॥ २९७ ॥

தேவி! குருநாமத்தை ஜபிப்பதினால் அநேக ஜன்மங்களில் சம்பாதிக்கப்பட்டுள்ள பாவங்கள் நசித்துப்போகின்றன; (இதில்) சற்றேனும் சந்தேகமில்லை. (உ௯௭)

श्रीगुरोस्सदृशं दैवं श्रीगुरोस्सदृशः पिता ।
गुरुध्यानं समं कर्म नास्ति नास्ति महीतले ॥ २९८ ॥

ஸ்ரீ குருவைப்போன்ற தெய்வம், ஸ்ரீ குருவைப்போன்ற தந்தை, குருவைத்தியானிக்கிறதைப் போன்ற கருமம், பூமியின்கண் இல்லை; இல்லை. (உ௯அ)

कुलं धनं बलं शास्त्रं बान्धवास्सोदरा इमे ।
मरणे नोपयुज्यन्ते गुरुरेको हि तारकः ॥ २९९ ॥

மரணசமயத்தில், குலமாவது, பொருளாவது, பலமாவது, சாஸ்திரமாவது, உறவினர்களாவது, இச்சகோதரர்களாவது உபயோகப்படுகிறதில்லை. குரு ஒருவன்றான் நிச்சயமாகக் கரையேற்றுவோன். (உ௯௯)

कुलमेव पवित्रं स्यात् सत्यं स्वगुरुसेवया ।
तृप्ताः स्युस्सकला देवा ब्रह्माद्या गुरुतर्पणात् ॥ ३०० ॥

உண்மையாகவே குருசேவையினல் குலமே சுத்தமாகும். குருவைத் திருப்திசெய்வதனல் பிரஹ்மா விஷ்ணு முதலிய தேவர்களெல்லோரும் திருப்தியை யடைவார்கள்.

गुरुरेको हि जानाति स्वरूपं देवमव्ययम् ।
तज्ज्ञानं यत्प्रसादेन नान्यथा शास्त्रकोटिभिः ॥ ३०१ ॥

அழிவில்லாத ஈசுவரசுவரூபத்தைக் குரு ஒருவரே அறிவர். அவருடைய பிரசாதத்தினற்றான் அந்த (சுவரூப)ஞானமுண்டாகிறது. அவ்வாறின்றிக் கோடிக்கணக்கான சாஸ்திரங்களினுலு முண்டாகாது. (௩Oக)

स्वरूपज्ञानशून्येन कृतमप्यकृतं भवेत् ।
तपोजपादिकं देवि सकलं बालजल्पवत् ॥ ३०२ ॥

தேவி! சுவரூபஞானமற்றவனால் தவம் ஜபம் முதலியன செய்யப்பட்டனவாயினும், எல்லாம் குழந்தையின் பிதற்றுதலைப்போல் செய்யப்படாதனவேயாம். (௩o௨)

शिवं केचिद्धरिं केचिद्विधिं केचित्तु केचन ।
शक्तिं दैवमिति ज्ञात्वा विवदन्ति वृथा नराः ॥ ३०३ ॥

ஜனங்கள், சிலர் சிவனையும், சிலர் விஷ்ணுவையும், சிலர் பிரஹ்மதேவனையும், சிலர் சக்தியையும் தெய்வமென்றெண்ணி வீணாய் வாதம் செய்கிறார்கள். (௩o௩)

न जानन्ति परं तत्त्वं गुरुदीक्षापराङ्मुखाः ।
भ्रान्ताः पशुसमा ह्येते स्वपरिज्ञानवर्जिताः ॥ ३०४ ॥

குருதீக்ஷையினைப் பெறாது பராமுகமானவர்கள் மேலான தத்துவத்தினை அறியார். இவர்கள் பிராந்தர்களும் தன்னையறியாதவர்களுமாய் மிருகங்களுக் கொப்பானவராவர். (௩o௪)

तस्मात्कैवल्यसिध्यर्थं गुरुमेव भजेत्प्रिये ।
गुरुं विना न जानन्ति मूढास्तत्परमं पदम् ॥ ३०५ ॥

பிரியையே! ஆகையால் மோக்ஷப்பிராப்திக்காக குருவையே பஜிக்கவேண்டும். குருவில்லாமல் மூடர்கள் அந்த மேலான பதத்தை யறியார்கள். (௩o௫)

भिद्यते हृदयग्रन्थिश्छिद्यन्ते सर्वसंशयाः ।
क्षीयन्ते सर्वकर्माणि गुरोः करुणया शिवे ॥ २०६ ॥

பார்வதி! குருவின் கருணையினால் இருதயமுடிச்சு அறுகின்றது; சமுசயங்களெல்லாம் நசித்துப்போகின்றன; கருமங்களெல்லாம் ஒழிந்துவிடுகின்றன. (௨௦௬)

कृताया गुरुभक्तेस्तु वेदशास्त्रानुसारतः ।
मुच्यते पातकाद्घोराद्गुरुभक्तो विशेषतः ॥ २०७ ॥

வேதசாஸ்திரானுசாரமாக விசேஷமாய்ச் செய்யப்பட்ட குருபக்தியினால், குருபக்தியுடையோன் கோரமான பாதகங்களினின்றும் விடுபடுகிறான். (௨௦௭)

दुःसंगं च परित्यज्य पापकर्म परित्यजेत् ।
चित्तचिन्हमिदं यस्य तस्य दीक्षा विधीयते ॥ २०८

துர்ச்சங்கத்தை விட்டுப் பாபகர்மத்தையும் விடல்வேண்டும். இந்தச் சித்தவடையாளம் எவனுக்கிருக்கின்றதோ, அவனுக்குத் தீக்ஷையானது விதிக்கப்படுகின்றது. (௨௦௮)

चित्तत्यागनियुक्तश्च क्रोधगर्वविवर्जितः ।
द्वैतभावपरित्यागी तस्य दीक्षा विधीयते ॥ २०९ ॥

சித்தத்தைத் தியாகத்திற் செலுத்தியவனும், குரோதகர்வங்களைவிட்டவனும், அவைதத்தன்மையை விட்டவனுமாகிய அவனுக்கே தீக்ஷை விதிக்கப்படுகின்றது. ()

एतल्लक्षणयुक्तत्वं सर्वभूतहिते रतम् ।
निर्मलं जीवितं यस्य तस्य दीक्षा विधीयते ॥ ३१० ॥

இத்தன்மைய இலக்கணத்தோடு கூடியதன்மையும், சகல ஜீவர்களுக்கும் இதத்தைச் செய்தலும், நிர்மலமாக ஜீவித்தலும் எவனுக் கிருக்கின்றதோ, அவனுக்குத் தீக்ஷை விதிக்கப்படுகின்றது. (நூகO)

क्रियया चान्वितं पूर्वं दीक्षाजालं निरूपितम् ।
मंत्रदीक्षाभिधं सांगोपांगं सर्वं शिवोदितम् ॥ ३११ ॥

கிரியையோடுகூடிய தீக்ஷைகள் முன்னமே நிரூபிக்கப்பட்டன. மந்திரதீக்ஷையென்பது முழுவதும் * கூஅ. சாங்கோபாங்கமாகச் சிவ(என்)னல் முன் சொல்லப்பட்டது. ()

क्रियया स्याद्विरहितां गुरुसायुज्यदायिनीम् ।
गुरुदीक्षां विना को वा गुरुत्वाचारपालकः ॥ ३१२ ॥

---

* கூஅ. சாங்கோபாங்கம் = அங்கங்களோடும் துணையங்கங்களோடும்.

கிரியையின்றியதும், குருசாயுச்சியத்தைத் தருவதுமான குருதீக்ஷையின்றி எவன் குருத்தன்மையாசாரத்தைப் பாலிப்பவனாவன்? (௩கஉ)

शक्तो न चापि शक्तो वा दैशिकांघ्रिसमाश्रयात् ।
तस्य जन्मास्ति सफलं भोगमोक्षफलप्रदम् ॥ ३१३ ॥

சக்தனாயினும் அசக்தனாயினும் தேசிகனது பாதத்தைச் செவ்வையாய் ஆசிரயிப்பானாயின், அவன் பிறப்புப் பயனுளதாகின்றது; போகமோக்ஷபயனைத் தருவதாகின்றது. (௩கங)

अत्यंतचित्तपक्कस्य श्रद्धाभक्तियुतस्य च ।
प्रवक्तव्यमिदं देवि ममात्मप्रीतये सदा ॥ ३१४ ॥

தேவி! எனது ஆத்மப்பிரியத்தின் பொருட்டு அத்தியந்தசித்தபரிபாக முள்ளவனுக்கும், சிரத்தைபக்தியுடையவனுக்கும் எப்போதும் இதனைச் சொல்லவேண்டும். ()

रहस्यं सर्वशास्त्रेषु गीताशास्त्रमिदं शिवे ।
सम्यक्परीक्ष्य वक्तव्यं साधकस्य महात्मनः ॥ ३१५ ॥

சிவையே! எல்லாச் சாஸ்திரங்களிலும் இக்கீதாசாஸ்திரம் இரகசியமானது. நன்றாய்ப் பரீக்ஷித்து, மகாத்மாவான சாதகனுக்கு இதைச் சொல்லவேண்டும். (௩கரு)

सत्कर्मपरिपाकाच्च चित्तशुद्धिश्च धीमता ।
साधकस्यैव वक्तव्या गुरुगीता प्रयत्नतः ॥ ३१६ ॥

நற்கருமங்களின் பரிபாகத்தினல் சித்தசுத்தியுண்டாகிறது. (அதற்குப்பின்) முயற்சியுடன் ஸாதகனுக்கே புத்திமானவன் குருகீதையைச் சொல்லவேண்டும். (ருககசு)

नास्तिकाय कृतघ्नाय दांबिकाय शठाय च ।
अभक्ताय विभक्ताय न वाच्येयं कदाचन ॥ ६१७ ॥

நாஸ்திகனுக்காவது, நன்றியறிவில்லாதவனுக்காவது, இடம்பாசாரிக்காவது, சட(முன்னென்று பின்னென்று பேசுவோ)னுக்காவது, பக்தியில்லாதவனுக்காவது, விபக்தனு (விரோதிப்பவனு)க்காவது ஒருபொழுதும் சொல்லக்கூடாது. (ருகள)

स्त्रीलोलुपाय मूर्खाय कामोपहतचेतसः ।
निन्दकाय न वक्तव्या गुरुगीता स्वभावतः ॥ ३१८ ॥

சுபாவத்தில் பெண்ணசை கொண்டவனுக்கும், மூர்க்கனுக்கும், காமத்தினல் கெட்டுப்போன சித்தத்தையுடையவனுக்கும், நிந்திக்கிறவனுக்கும் குருகீதையைக் கற்பிக்கக்கூடாது. (ருகஅ)

सर्वपापात्प्रशमनं सर्वोपद्रववारकम् ।
जन्ममृत्युहरं देवि गीताशास्त्रमिदं शिवे ॥ ३१९ ॥

தேவி! சிவையே! இக்கீதாசாஸ்திரமானது பாவ மெல்லாவற்றையும் போக்குகிறதாயும், எல்லா உபத்திரவங்களையும் நிவாரணஞ் செய்கிறதாயும், ஜநநமரணத்தைக் கெடுப்பதாயு மிருக்கிறது. (௩கக௯)

श्रुतिसारमिदं देवि सर्वमुक्तं समासतः ।
नान्यथा सद्गतिः पुंसां विना गुरुपदं शिवे ॥ ३२० ॥

சிவையே! தேவி! இப்படிச் சுருக்கமாய் வேதத்தின் ஸாரமெல்லாம் (உனக்கு) சொல்லப்பட்டது; குருபதத்தினையல்லாது ஜனங்களுக்கு வேறுவிதத்தால் நற்கதி கிடையாது. (௩௨0)

बहुजन्मकृतात्पापादयमर्थो न रोचते ।
जन्मबन्धनिवृत्यर्थं गुरुमेव भजेत्सदा ॥ ३२१ ॥

அநேக ஜந்மங்களில் செய்யப்பட்ட பாவத்தினால் (குருவிசேஷமென்னும்) இவ்வர்த்தம் உருசிக்கிறதில்லை. ஜந்மபந்தம் நிவாரணமாவதற்காக எப்பொழுதும் குருவையே அடையவேண்டும். (௩௨க)

अहमेव जगत्सर्वं अहमेव परं पदम् ।
एतज्ज्ञानं यतो भूयात्तं गुरुं प्रणमाम्यहम् ॥ २२२ ॥

நானே ஜகத்தெல்லாம், நானே பரமபதம் என்றிவ் விதமான ஞானம் எவரிடத்திலிருந்து உண்டாகிறதோ, அப்படிப்பட்ட குருவை மிக நமஸ்கரிக்கிறேன். (௨௨௨)

अलं विकल्पैरहमेव केवलं मयि स्थितं विश्वमिदं चराचरम् ।
इदं रहस्यं मम येन दर्शितं स वन्दनीयो गुरुरेव केवलम् ॥ २२३ ॥

விகற்பங்களெல்லாம் போதும்; கேவலம் யானே உளன்; சராசரரூபமான இந்த விசுவமானது என்னிடத்தி லுள்ளது என்னும் இந்த ரகசியமானது எவரால் எனக்குத் தெரிவிக்கப்பட்டதோ, அந்தக் குரு ஒருவர்மாத்திரமே நமஸ்கரிக்கத் தகுந்தவர். (௨௨௩)

यस्यान्तं नादिमध्यं न हि करचरणं नामगोत्रं न सूत्रम् ।
नो जातिर्नैव वर्णो न भवति पुरुषो नो नपुंसो न च स्त्री ॥ २२४ ॥

எவருக்கு ஆதி மத்தியம் அந்த மில்லையோ, கைகால்களு மில்லையோ, நாமகோத்திரங்களாவது ஸூத்ரமாவது இல்லையோ, ஜாதியாவது வர்ணமாவது கிடையாதோ, ஸ்திரீ புருஷன் நபும்ஸகன் என்னும் ரூபங்க ளில்லையோ, (௨௨௪)

नाकारं नो विकारं न हि जनिमरणं नास्ति पुण्यं न पापम् ।
नोऽतत्त्वं तत्त्वमेकं सहजसमरसं सद्गुरुन्तन्नमामि ॥ ३२५ ॥

ஆகாரமாவது விகாரமாவது இல்லையோ, ஜன்மமாவது மரணமாவ தில்லையோ, பாபபுண்ணியங்களு மில்லையோ, * கக. அதத்துவமில்லையோ, ஒரே தத்துவஸ்வரூப முள்ள தோ, சகஜசமரசமே உள்ளதோ, அப்படிப்பட்ட ஸத்குருவை நமஸ்கரிக்கிறேன். (௩உரு)

नित्याय सत्याय चिदात्मकाय नव्याय भव्याय परात्पराय ।
शुद्धाय बुद्धाय निरञ्जनाय नमोस्तु नित्यं गुरुशेखराय ॥ ३२६ ॥

நித்தியமானவரும், சத்திய (சுவரூப)மானவரும், சித்ஸ்வரூபமானவரும், நவமும், பவ்வியமும், பராத்பரமுமானவரும், சுத்தபுத்தநிரஞ்சனமுமானவருமான குருசேகருக்(பரமகுருவிற்)கு எப்பொழுதும் நமஸ்காரம். (௩உ௬)

सच्चिदानंदरूपाय व्यापिने परमात्मने ।
नमः श्रीगुरुनाथाय प्रकाशानंदमूर्तये ॥ ३२७ ॥

சச்சிதானந்தவடிவினரும், வியாபக முடையவரும், பரமாத்மாவும், பிரகாசானந்தவடிவினருமாகிய ஸ்ரீ குருநாதருக்கு நமஸ்காரம். (௩உ௭)

---

※ கக. அதத்துவம்=பொய்மை, தத்துவம்=மெய்மை.

सत्यानन्दस्वरूपाय बोधैकसुखकारिणे ।
नमो वेदांतवेद्याय गुरवे बुद्धिसाक्षिणे ॥ ३२८ ॥

சத்தியாநந்தசொரூபரும், ஞானமுக்கியமான ஆநந்தத்தைச் செய்பவரும், வேதாந்தங்களா லறியப்படுபவரும், புத்திக்குச் சாக்ஷியுமாயுள்ள குருவிற்கு நமஸ்காரம். (௩உஅ)

नमस्ते नाथ भगवन् शिवाय गुरुरूपिणे ।
विद्यावतारसंसिध्यै स्वीकृतानेकविग्रह ॥ ३२९ ॥

வித்தை * க00. யவதாரணஞ் செவ்வையாய்ச் சித்தித்தற்பொருட்டுக் கொள்ளப்பட்ட அநேக விக்கிரகங்களையுடையவரே! நாதனே! பகவானே! சிவமும் குருவடிவமுமாகிய உமக்கு நமஸ்காரம். (௩உ௯)

नवाय नवरूपाय परमार्थैकरूपिणे ।
सर्वाज्ञानतमोभेदभानवे चिद्घनाय ते ॥ ३३० ॥

நவமும் (புதிதும்), * க0க. நவவடிவமும், பரமார்த்தமுக்கியவடிவமும், சகல அஞ்ஞானதமத்தை (இருளை)யும்

---

க00. அவதாரணம் = கொள்ளுதல்.

க0க. ஒன்பது வடிவம், அவை பிரஹ்மா, விஷ்ணு, ருத்திரன், மகேசுவரன், சதாசிவன், நாதம், விந்து, சக்தி, சிவம் என்பன.

பேதிக்கும் சூரியனும், * ௧0௨. சிற்கனமுமாகிய உமக்கு நமஸ்காரம். (௩௩0)

स्वतंत्राय दयाक्लृप्तविग्रहाय शिवात्मने ।
परतंत्राय भक्तानां भव्यानां भव्यरूपिणे ॥ ३३१ ॥

சுவதந்திரமுடையவரும், தயையிலாகிய விக்கிரகமுடையவரும், சிவவடிவமானவரும், பக்தர்களுக்குப் பாரதந்திரமுள்ளவரும், * ௧0௩. பவ்வியமானவர்களுக்குப் பவ்வியவடிவினரும், (௩௩௧)

विवेकिनां विवेकाय विमर्शाय विमर्शिनाम् ।
प्रकाशिनां प्रकाशाय ज्ञानिनां ज्ञानरूपिणे ॥ ३३२ ॥

पुरस्तात्पार्श्वयोः पृष्ठे नमस्कुर्यादुपर्यधः ।
सदा मच्चित्तरूपेण विधेहि भवदासनम् ॥ ३३३ ॥

விவேகிகளுக்கு விவேகமானவரும், ஆராய்ச்சியுள்ளோருக்கு ஆராய்ச்சியாயுள்ளவரும், பிரகாசமுள்ளவற்றிற்குப் பிரகாசமாயுள்ளவரும், ஞானிகளுக்கு ஞானவடிவாயுள்ளவருமாகிய தமக்கு முன்னும் பக்கங்களிலும் பின்னுப்

---

* ௧0௨. ஞானநெருக்கம்.

* ௧0௩. பவ்வியம் = உண்மை.

மேலும் கீழும் நமஸ்காரஞ் செய்தல்வேண்டும். எப்போ தும் எனது சித்தவடிவமாகத் தம தாசனத்தை விதிப்பீராக.

श्रीगुरुं परमानन्दं वन्दे ह्यानन्दविग्रहम् ।
यस्य सन्निधिमात्रेण चिदानन्दायते मनः ॥ २३४ ॥

எவருடைய சந்நிதிமாத்திரத்தால் மனது சிதாநந்தமய மாகின்றதோ, அத்தன்மைய பரமாநந்தரும் ஆநந்தவிக்கிர கருமாகிய ஸ்ரீகுருவாகிய தம்மை நமஸ்கரிக்கிறேன். (௩௩௪)

नमोस्तु गुरवे तुभ्यं सहजानन्दरूपिणे ।
यस्य वागमृतं हंति विषं संसारसंज्ञकम् ॥ २३५ ॥

எவருடைய வாக்காகிய அமிர்தமானது சம்ஸாரமென் னும் விஷத்தைக் கொல்லுகின்றதோ, அத்தன்மைய சகஜா நந்தவடிவ குருவாகிய உமக்கு நமஸ்காரம்.　　(௩௩௫)

नानायुक्तोपदेशेन तारिता शिष्यसंततिः ।
तत्कृपासारवेदेन गुरुचित्पदमच्युतम् ॥ २३६ ॥

பல பொருத்தமான உபதேசத்தால் சிஷ்யசந்ததி இர க்ஷிக்கப்பட்டதாகின்றது. அத்தமது கிருபையின் சார மான ஞானத்தால் அச்சுதமான குருவின் சிற்பதம் பெறப் படுகின்றது.　　(௩௩௬)

अच्युताय नमस्तुभ्यं गुरवे परमात्मने ।
* स्वारामोक्तपदेच्छूनां दत्तं येनाच्युतं पदम् ॥ ३३७ ॥

தனது இரமிப்பிற்காகக் கூறப்படும் பதத்தை விரும்புவோருக்கு அச்சுதமான பதம் எவரால் தரப்பட்டதோ, அத்தன்மைய அச்சுதமும் பரமாத்மாவுமான குருவாகிய உமக்கு நமஸ்காரம். (௩௩௭)

नमोऽच्युताय गुरवेऽ † ज्ञानध्वांतैकभानवे ।
शिष्यसन्मार्गपटवे कृपापीयूषसिंधवे ॥ ३३८ ॥

அஞ்ஞானமாகிய இருளுக்குச் சூரியனும், சிஷ்யனது சன்மார்க்கத்திற்குச் சமர்த்தரும், கிருபையாகிய அமுதத்திற்குச் சமுத்திரமும், அச்சுதமுமான குருவாகிய உமக்கு நமஸ்காரம். (௩௩அ)

ओमच्युताय गुरवे शिष्यसंसारहेतवे ।
भक्तकार्यैकसिंहाय नमस्ते चित्सुखात्मने ॥ ३३९ ॥

---

* सर्वतन्त्रस्वतन्त्राय चिद्घनानन्दमूर्त्तये = சர்வதந்திரங்களினும் சுவதந்திரரும் சிற்கனானந்தமூர்த்தியுமான உமக்கு என்றும் பாடம்.

† विद्याविद्यास्वरूपिणे = வித்தையவித்தைச் சொரூபமானவரும் என்றும் பாடம்.

சிஷ்யனது சம்ஸாரத்தினைக் கெடுத்தற்கு ஏதுவான வரும், பக்தர்களது காரியத்திற்கு முக்கியமான சிங்கமும், சிற்சுகவடிவினரும், அச்சுதருமா யிருக்கின்ற ஓங்காரவடிவ குருவாகிய உமக்கு நமஸ்காரம். (௩௩௯)

गुरुनामसमं दैवं न पिता न च बांधवाः ।
गुरुनामसमः स्वामी नेदृशं परमं पदम् ॥ ३४० ॥

குருநாமத்திற்குச் சமமான தெய்வமு மில்லை; பிதாவு மில்லை; பந்துக்களு மில்லை. குருநாமத்திற்குச் சமமான சுவாமியு மில்லை; இத்தன்மைய பரமபதமு மில்லை. (௩௪0)

एकाक्षरप्रदातारं यो गुरुं नैव मन्यते ।
श्वानयोनिशतं गत्वा चांडालेष्वपि जायते ॥ ३४१ ॥

ஏகாக்ஷரத்தைத் தருபவராகிய குருவை எவன் மதிக்கவில்லையோ, அவன் சுவானயோனிநூற்றை யடைந்து, சண்டாளயோனிகளிலும் பிறக்கின்றான். (௩௪௧)

गुरुत्यागाद्भवेन्मृत्युर्मंत्रत्यागाद्दरिद्रता ।
गुरुमंत्रपरित्यागी रौरवं नरकं व्रजेत् ॥ ३४२ ॥

குருவை விடுதலால் மரண முண்டாகும். மந்திரத்தை விடுதலால் தரித்திரத்தன்மை யுண்டாம். குருவையும் மந்திரத்தையும் விட்டவன் இரௌரவநரகத்தை யடைகிறான்.

शिवक्रोधाद्गुरुस्त्राता गुरुक्रोधाच्छिवो न हि ।
तस्मात्सर्वप्रयत्नेन गुरोराज्ञां न लंघयेत् ॥ ३४३ ॥

** கo௪. சிவனது கோபத்தினின்றும் குரு இரட்சிக்கின்றார். குருவினது கோபத்தினின்றும் சிவன் இரட்சிப்பதில்லை. ஆகலாற் சகலப்பிரயத்தினத்தினாலும் குராவணையைக் கடக்கலாகாது. (௩௪௩)

संसारसागरसमुद्धरणैकमंत्रं ब्रह्मादिदेवमुनिपूजितसिद्धमंत्रम् ।
दारिद्र्यदुःखभवरोगविनाशमंत्रं वंदे महाभयहरं गुरुराजमंत्रम् ॥ ३४४ ॥

சம்ஸாரசமுத்திரத்தைக் கடப்பிக்கும் முக்கிய மந்திரமும், பிரஹ்மாதி தேவர்களாலும் முனிவராலும் பூஜிக்கப்பட்ட சித்தமந்திரமும், * கoரு. தாரித்திரியதுக்கத்தையும் பவரோகத்தையும் கெடுக்கும் மந்திரமுமாகிய மகாபயத்தைக்கெடுக்கும் குருராஜமந்திரத்தை நமஸ்கரிக்கின்றேன்.()

सप्तकोटिमहामंत्राश्चित्तविभ्रंशकारकाः ।
एक एव महामंत्रो गुरुरित्यक्षरद्वयम् ॥ ३४५ ॥

---

** கo௪. இந்தச் சுலோகம் அ அ·வது சுலோகத்தினைப்போன்றிருக்கினும் அபிப்பிராயபேதத்தால் வேறுபடுகின்றது.

* கoரு. வறுமைத்துயரை.

ஏழுகோடி மகாமந்திரங்களும் சித்தமயக்கத்திற்குக் காரணமானவை. குருவென்னு மிரண்டெழுத்துள்ள மந்திர மொன்றே மேலானதாம். (௩௪௫)

एवमुक्त्वा महादेवः पार्वतीं पुनरब्रवीत् ।
इदमेव परं तत्त्वं श्रुणु देवि सुखावहम् ॥ ३४६ ॥

இவ்விதமாகச் சொல்லி, மகாதேவர் பார்வதியைப் பார்த்து மறுபடியும் சொல்லலாயினர் :—கேள், தேவி! இதுதான் சுகத்தைத்தரும் மேலான (பரம்) தத்துவம் என்றறி. (௩௪௬)

गुरुतत्त्वमिदं देवि सर्वमुक्तं समासतः ।
रहस्यमिदमव्यक्तन्न वदेद्यस्य कस्यचित् ॥ ३४७ ॥

தேவி! இப்படிச் சுருக்கமாய்க் குருதத்துவம் யாவும் உனக்குச் சொல்லப்பட்டது. இது அவ்யக்தமான (வெளிப்படாத) ரகஸியம். ஆதலால் இதை(தகுதியில்லாத) எவனுக்கும் சொல்லலாகாது. (௩௪௭)

न मृषा स्यादियं देवि मदुक्तिः सत्यरूपिणी ।
गुरुगीतासमं स्तोत्रं नास्ति नास्ति महीतले ॥ ३४८ ॥

தேவி! என்னுடைய இந்த ஸத்தியசுவரூபமான வார்த்தை பொய்யாகாது. இப்பூமியின்மீது குருகீதைக்குச் சமமான ஸ்தோத்திரம் இல்லவேயில்லை. (௩௪௮)

गुरुगीतामिमां देवि भवदुःखविनाशिनीम् ।
गुरुदीक्षाविहीनस्य पुरतो न पठेत्क्वचित् ॥ ३४९ ॥

ஸம்ஸாரதுக்கத்தை நிவர்த்திக்கும் இக்குருகீதையை, தேவி! குருதீக்ஷையில்லாதவன் முன் ஒருபொழுதும் படிக்கலாகாது. (௩௪௯)

रहस्यमत्यन्तरहस्यमेतन्न पापिना लभ्यमिदं महेश्वरि ।
अनेकजन्मार्जितपुण्यपाकाद्गुरोस्तु तत्त्वं लभते मनुष्यः ॥ ३५० ॥

மகேசுவரி! இது இரகசியம்; அத்தியந்தரகசியம்; இது பாபிகளுக்குக் கிடைக்கத்தக்கதன்று. அநேக ஜன்மங்களிற் சம்பாதிக்கப்பட்ட புண்ணியங்களின் பரிபாகத்தினால் மனிதன் குருவின் தத்துவத்தினைப் பெறுகின்றான். (௩௫௦)

यस्य प्रसादादहमेव सर्वं मय्येव सर्वं परिकल्पितं च ।
इत्थं विजानामि * सदात्मरूपं तस्यांघ्रिपद्मं प्रणतोऽस्मि नित्यम् ॥ ३५१ ॥

எவரது பிரசாதத்தினால் யானே எல்லாம், என்னிடத்திற்றானே யாவும் கற்பிக்கப்பட்டிருக்கின்றன என்றிவ்வாறு சத்தாகிய ஆத்மவடிவத்தை யறிகின்றேனோ, அவரது பாததாமரையைத் தினமும் பணிகின்றேன். (௩௫௧)

---

* निजस्वरूपं = தனது சொரூபத்தை என்றும் பாடம்.

अज्ञानतिमिरांधस्य विषयाक्रांतचेतसः ।
ज्ञानप्रभाप्रदानेन प्रसादं कुरु मे प्रभो ॥ ३५२ ॥

பிரபுவே! அஞ்ஞானமாகிய திமிரத்தால் குருடான வனும், விஷயத்தில் விழுக்கப்பட்ட சித்தமுடையவனுமாகிய எனக்கு ஞானப்பிரபையைக் கொடுத்தலால் பிரசாதத்தைச் செய்வீராக. (நுருஉ)

इति श्रीगुरुगीतायां तृतीयोऽध्यायः ॥

ஸ்ரீகுருகீதை மூன்ரும் அத்தியாயம் முடிந்தது.

---

इति श्रीस्कान्दोत्तरखण्डे सनत्कुमारसंहितायां
उपरिभागे उमामहेश्वरसंवादे
॥ श्रीगुरुगीता समाप्ता ॥

ஸ்ரீஸ்கந்தபுராணம் உத்தரகண்டத்தில்
சநற்குமாரசங்கிதையின் மேற்பாகத்திலுள்ள
உமாமகேசுவரசம்வாதமான
ஸ்ரீகுருகீதை முடிந்தது.



ओं

## ॥ महानारायणोपनिषद् ॥

## *மகாநாராயணோபநிடதம்.*

"सकलवेदशास्त्रसिद्धान्तरहस्यजन्मजन्माभ्यस्तात्यन्तोत्कृष्टसुकृतपरिपाकवशात्सद्भिः सङ्गो जायते । तस्माद्विधिनिषेधविवेको भवति । ततः सदाचारप्रवृत्तिर्जायते । सदाचारादखिलदुरितक्षयो भवति । तस्मादन्तःकरणमतिविमलं भवति । ततः सद्गुरुकटाक्ष-मंतःकरणमाकांक्षति । तस्मात्सद्गुरुकटाक्षलेशविशेषेण सर्वसिद्धयः सिध्यन्ति । सर्वबन्धाः प्रविनश्यन्ति । श्रेयोविघ्नाः सर्वे प्रलयं यान्ति । सर्वाणि श्रेयांसि स्वयमेवायान्ति । यथा जात्यंधस्य रूपज्ञानं न विद्यते । तथा गुरूपदेशेन विना कल्पकोटिभिस्तत्त्वज्ञानं न विद्यते । तस्मात्स-द्गुरुकटाक्षलेशविशेषेणाचिरादेव तत्त्वज्ञानं भवति ॥ *சகல வேத சாஸ்திரங்களின் சித்தாந்தரகசிய முணர்ந்து, பல ஜன்மங்களில் அப்பியசிக்கப்பட்ட அத்தியந்த உத்கிருஷ்ட புண்ணிய பரிபாகவசத்தால் சத்துக்களோடு சங்க முண்டாகின்றது. அதனால் விதிநிஷேதவிவேக முண்டாகின்றது. அதனின்றும் சதாசாரப்பிரவிருத்தி பிறக்கின்றது. சதாசாரத்தால் சர்வ பாபக்ஷய முண்டாகிறது. அதனால் அந்தக்கரணம் மிகப் பரிசுத்த மாகின்றது. அதனால் சற்*

குருகடாக்ஷத்தினை அந்தக்கரணம் விரும்புகின்றது. அதனால் சற்குருகடாக்ஷலேசவிசேஷத்தினால் சர்வசித்திகளுமுண்டாகின்றன; சர்வபந்தங்களும் அடியோடு நாசமாகின்றன. சிரேயசின் விக்கினங்கள் யாவும் நசிக்கின்றன. சர்வசிரேயசு (நலங்)களும் தாமாகவே வருகின்றன. எப்படிப் பிறவிக்குருடனுக்கு ரூபஞான மில்லையோ, அதுபோலக் குருவுபதேசமின்றிக் கல்பகோடிகளாலும் தத்துவஞானம் இருப்பதில்லை. ஆதலால் சற்குருகடாக்ஷலேசவிசேஷத்தால் தத்துவஞானம் தாமதமின்றியே யுண்டாகின்றது."

---

ओं

|| ब्रह्मविद्योपनिषद् ||

பிரஹ்மவித்யோபநிடதம்.



"तस्य दास्यं सदा कुर्यात्प्रज्ञया परया सह ।
शुभं वाऽशुभमन्यद्वा यदुक्तं गुरुणा भुवि ॥
तत्कुर्यादविचारेण शिष्यः संतोषसंयुतः ।
हंसविद्यामिमां लब्ध्वा गुरुशुश्रूषया नरः ॥

आत्मानमात्मना साक्षाद्ब्रह्म बुद्ध्वा सुनिश्चलम् ।
देहजात्यादिसंबंधान्वर्णाश्रमसमन्वितान् ॥
वेदशास्त्राणि चान्यानि पदपांसुमिव त्यजेत् ।
गुरुभक्तिं सदा कुर्याच्छ्रेयसे भूयसे नरः ॥
गुरुरेव हरिः साक्षान्नान्य इत्यब्रवीच्छ्रुतिः ॥

அக்குருவின் ஊழியத்தினை மேலான பிரஞ்ஞையோடு எப்போதும் செய்யவேண்டும். குருவினுற் சொல்லப்பட்டது சுபமோ, அசுபமோ, மற்றெதுவோ, அதனைப் புவியில் விசாரியாமல் சிஷ்யன் சந்தோஷத்தோடுகூடியவனாய்ச் செய்யவேண்டும். குரு பணிவிடையால் நரன் ஹம்ஸ வித்தையாகிய இதனைப் பெற்று, ஆத்மாவினுல் ஆத்மாவினைச் சாக்ஷாத் மிக நிச்சலமான பிரஹ்மமாக அறிந்து, வர்ணுசிர தர்மங்களோடுகூடிய தேகம் ஜாதிமுதலிய சம்பந்தங்களையும் வேதசாஸ்திரங்களையும் பிறவற்றையும் காற்றாசிபோல் விடவேண்டும். நரன் மிக்க சிரேயசின்பொருட்டுக் குரு பக்தியினை எப்போதும் செய்யவெண்டும். குருவே சாக்ஷாத் ஹரி; வேறல்லவென்று வேதம் கூறுகின்றது."

---

ओं

## ॥ अन्यग्रंथेषु विद्यमानाः ॥

## பிறநூல்களில் உள்ளவை.



गुकारो सिद्धसंज्ञः स्याद्रेफः पापस्य दाहकः ।
उकारो विष्णुरव्यक्तास्त्रितयात्मा गुरुर्भवेत् ॥ १ ॥

குகார மென்பது சித்தரின் பெயராகின்றது. ரேபம் (ரகாரம்) பாபத்தினை எரிப்பதாம். உகாரம் அவ்யக்தமான விஷ்ணு. இம்மூவடிவினர் குரு வாகின்றார். (க)

गणेशो वह्निना युक्तो विष्णुना समन्वितः ।
वर्णद्वयात्मको मन्त्रश्चतुर्मुक्तिप्रदायकः ॥ २ ॥

கணேசபீஜமான ககாரமானது அக்னிபீஜமான ரகாரத்தோடு கூடியதாய், விஷ்ணுவான உகாரத்தோடு சேர்ந்து, குருவென்னும் இரண்டெழுத்துவடிவினதாகிய மந்திரமாய், (அநுஷ்டானதாரதம்மியத்தின்படி) சாலோகாதி நால்வகைமுக்தியினைத் தருவதாகின்றது. (உ)

यदा मम शिवस्यापि ब्रह्मणो ब्राह्मणस्य हि ।
अनुग्रहो भवेन्नृणां सेव्यते सद्गुरुस्तदा ॥ ३ ॥

எப்பொழுது விஷ்ணுவாகிய என்னுடையதும், சிவனுடையதும், பிரஹ்மாவினதும், பிரஹ்மஞானியாகிய பிராஹ்மணனுடையதுமான அநுக்கிரகம் நரர்களுக் குண்டாகின்றதோ, அப்பொழுதுதான் சற்குரு சேவிக்கப்படுவர். (சற்குருசேவை கிடைக்கும் என்பது பொருள்.) (௩)

हरौ प्रसन्नेपि च वैष्णवा जनाः संप्रार्थयंतो गुरुभक्तिमव्ययाम् ।
गुरौ प्रसन्ने जगदीश्वरः सदा जनार्दनस्तुष्यति सर्वसिद्धिदः ॥ ४ ॥

ஹரி பிரசன்னராயினும், விஷ்ணு உபாசகர்களாகிய ஜனங்கள் அழிவின்றிய குருபக்தியினை (அவரிடம்) செவ்வையாய்ப் பிரார்த்திக்கின்றனர். குரு பிரசன்னராயின், ஜகதீசுவரனான ஜநார்த்தனர் சர்வசித்திகளையும் தருபவராய் எப்போதும் சந்தோஷிக்கின்றார். (இதனால் குருபக்தியே முடிவான பயனைத் தருவதாமென்பது பெறப்படுகின்றது). (௪)

गुरुः सदादर्शयिता प्रवृत्तिं तीर्थं व्रतं योगतपादिधर्मान् ।
आचारवर्णादिविवेकयज्ञान् ज्ञानं परं भक्तिविवेकयुक्तम् ॥ ५ ॥

குருவானவர் பிரவிருத்தி, தீர்த்தம், விரதம், யோகம், தபமுதலியதர்மங்கள், ஆசாரம் வர்ணமுதலிய விவேகத்தோடுகூடிய யஞ்ஞங்கள், பக்தி விவேக மென்பவற்றோடு கூடிய மேலான ஞானம் என்பவற்றை எப்பொழுதும் காட்டுபவராகின்றார். (௫)

गुरोर्विना न श्रवणं भवेत्कस्यापि कस्यचित् ।
विना कर्णेन शास्त्रस्य श्रवणं तत्कुतो भवेत् ॥ ६ ॥

காதின்றிச் சாத்திரத்தின் சிரவணமாகிய அது எவ்வாறுண்டாகும்? (உண்டாகாது.) அவ்வாறு குருவின்றி எவனுக்கும் எதன் சிரவணமு முண்டாகாது. (சு)

न तीर्थयात्रा न च देवयात्रा न देहयात्रा न च गेहयात्रा ।
अहर्निशं ब्रह्म हरिः सुबुद्धो गुरुः प्रसेव्यो न हि सेव्यमन्यत् ॥ ७ ॥

தீர்த்தயாத்திரையு மன்று; தேவயாத்திரையு மன்று; தேகயாத்திரையு மன்று; கிருகயாத்திரையு மன்று. பகலுமிரவும் செவ்வையாய்ச் சேவிக்கத்தக்கது பிரஹ்மமும் ஹரியும் நல்லறிஞருமான குருவே; மற்றையது சேவிக்கத்தக்கதாகாது. (எ)

["यत्र यत्र दृढा भक्तिर्यदा कस्य महात्मनः ।
तत्र तत्र महादेवः प्रकाशमुपगच्छति ॥ ८ ॥

எங்கெங்கு எந்த மகாத்மாவுக்குத் திடமான பக்தி எப்பொழு துண்டாகின்றதோ, அப்பொழுது அங்கங்கு மகாதேவர் பிரகாசத்தினை யடைகின்றார் (வெளிப்படுகின்றார்)." என்னின், சாக்ஷாத் சிவஸ்வரூபமான குருவினிடத்துத் திட பக்திசெய்பவன் சிவஸ்வரூபமே யாவன் என்பதைச் சொல்லவும் வேண்டுமோ?] (அ)

चक्षुर्गम्यं गुरुं त्यक्त्वा शास्त्रगम्यं तु यः स्मरेत् ।
हस्तस्थमुदकं त्यक्त्वा घनस्थमभिवाञ्छति ॥ ९ ॥

கண்ணெதிர் காண நிற்குங் காருண்ய குருவை விட்டுக்
கண்ணுறா தரிய நூலாற் கணித்திடப் படுவதொன்றை
எண்ணுறு மூடர் கையி லெய்துநீ சொழுக விட்டு
விண்ணுறு மேக நீரை விரும்புந ரொப்பார் கண்டீர். (கூ)

सुलभं तु गुरुं त्यक्त्वा दुर्लभं य उपासते ।
लब्धं त्यक्त्वा धनं मूढो गुप्तमन्वेषते क्षितौ ॥ १० ॥

எளிதினிற் பெறுவ தாய வெழிற்குரு தன்னை நீத்திங்
களவிடப் படாத தாகி யரிதினிற் பெறுவ தொன்றை
உளமதிற் கொள்ளல் பெற்ற வொண்ணிதி நீத்துப் பூவிற்
றெளிவுறக் கிடக்குஞ் செல்வந் தேடுத லொக்கு மன்றே. (க௦)

॥ समाप्तः ॥

முடிந்தது.

---

வாழ்த்து.

குருபத கமலம் வாழி கோடிபல் லூழி காலம்
குருபத மொழியிக் கீதை குவலயத் தென்றும் வாழி
குருபத மளிக்குங் கீதை குறைவறப் படிப்போர் கேட்போர்
குருபத மடைந்தோர் தங்கள் குலத்தொடும் வாழி வாழி.

॥ ओं तत्सद्गुरुपरब्रह्मणे नमः ॥

ஓம் தத்ஸத்குருபரப்ரஹ்மணே நம:

॥ ओं ॥

## ॥ श्रीगुर्वष्टकम् ॥

## * ஸ்ரீ குர்வஷ்டகம்.



शरीरं सुरूपं सुतो वा कलत्रं यशश्चारु चित्रं धनं मेरुतुल्यम् ।
मनश्चेन्न लग्नं हरेरंघ्रिपद्मे तन्नः किं ततः किं ततः किं ततः किम् ॥१॥

நல்லவழகிய சரீரமும், புத்திரனும், களத்திரமும் (மனைவியும்), அழகிய கீர்த்தியும் (புகழும்), மேருவுக்குச் சமமாகிய பலவகைத்தனமு மிருந்து, மனதானது ** ஹரியின் (குருவின்) பாதகமலங்களில் பற்றவில்லையாயின், அதன்பின் என்ன ? (பயன்) அதன்பின் என்ன ? அதன்பின் என்ன ? அதன்பின் என்ன ? (க)

कलत्रं धनं पुलपौत्रादिसर्वं गृहं बांधवाः सर्वमेतद्धि जातम् ।
गुरोरंघ्रिपद्मे मनश्चेन्न लग्नं ततः किं ततः किं ततः किं ततः किम् ॥२॥

களத்திரம் தனம் புத்திரபௌத்திராதியாவும், வீடு பந்துக்கள் இவ்வெல்லா முண்டாயிருந்தும், குருவின் பாத

* குரு + அஷ்டகம் = குர்வஷ்டகம் என்பது சம்ஸ்கிருதசந்தி.

** ஈசுவரனே குருவென்பது தோன்ற ஹரியின் என்றார். இதில் ஒன்பது சுலோகங்களிருக்கினும் அஷ்டகமென்று வழங்கப் படுகிறது.

கமலங்களில் மனம் பற்றவில்லையாயின், அதன்பின் என்ன? அதன்பின் என்ன? அதன்பின் என்ன? அதன்பின் என்ன?

षडंगादिवेदो मुखे शास्त्रविद्या कवित्वादि गद्यं सुपद्यं करोति ।
गुरोरंघ्रिपद्मे मनश्चेन्न लग्नं ततः किं ततः किं ततः किं ततः किम् ॥३॥

முகத்தில் ஆறங்கமுதலியவற்றோடு கூடிய வேதங்களும், சாஸ்திரவித்தையும், கவித்துவமுதலியனவு மிருக்கின்றன. கத்தியம் (வசனம்) நல்ல பத்தியம் (செய்யுள்) செய்கின்றான். (இவையிருந்தும்) குருவின் பாதகமலங்களில் மனம் பற்றவில்லையாயின், அதன்பின் என்ன? அதன்பின் என்ன? அதன்பின் என்ன? அதன்பின் என்ன? (ங)

विदेशेषु मान्यः स्वदेशेषु धन्यः सदाचारवृत्तेषु मत्तो न चान्यः ।
गुरोरंघ्रिपद्मे मनश्चेन्न लग्नं ततः किं ततः किं ततः किं ततः किम् ॥४॥

பிறதேசங்களில் மதிக்கப்படுபவனாய், தன்தேசத்தில் தன்னியனாய் (பாக்கியசாலியாய்), சதாசார நடையினருள் எனக்குச் சமானன் வேறொருவ னில்லாதவனா யிருக்கின்றேன். (இவ்வாறிருந்தும்) குருவின் பாதகமலங்களில் மனம் பற்றவில்லையாயின், அதன்பின் என்ன? அதன்பின் என்ன? அதன்பின் என்ன? அதன்பின் என்ன? (ச)

